# * மங்கை *

பிப்ரவரி, 92

- ☆ பகவதி அம்மன் (அருள்வலம்)
- ☆ நாட்டை உயர்த்திய நங்கையர் (புதிய தொடர்)
- ☆ அறிவாற்றல் வளர்கிறதா? (கலந்துரையாடல்)
- ☆ ஆடல்-பாடல் (இசை-நாட்டிய விமரிசனம்)
- ☆ நடை பயிற்சி (ஆரோக்கிய கட்டுரை)

மற்றும் வழக்கமான பகுதிகள் அனைத்தும்

விலை ரூ. 6/-

# Don't you owe the















# little one a cuddles?













CUDDLES

CHANDAMAMA TOYTRONIX



# அம்புலிமாமா

பிப்ரவரி 1992



## பொருளடக்கம்






தனிப்பிரதி ரூ. 4-00.

வருட சந்தா ரூ. 48-00.





# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி


## புன்னகையின் மதிப்பு!

ஒருசில பள்ளிச் சிறுவர் சிறுமியர் நம் குடிஅரசுத் தலைவர் ஸ்ரீ ஆர். வெங்கடராமனைச் சந்தித்தபோது "நீங்கள் எப்போதும் புன்னகை பூத்த முகத்துடன் இருப் பதை தொலைக்காட்சியில் காண்கிறோம். இப்போதும் அப்படியே விளங்குகிறீர்கள். இதன் ரகசியம் என்ன?" என்று கேட்டார்கள். கடினமான உழைப்பும் நேர்மை யுடனும் அந்தரங்க சுத்தியுடனும் இருந்து நம் தாய் நாட்டை நேசித்து நம் கடமையைச் செய்து வந்தால் இப்படி இருக்க முடியும் என்றார் அவர்.

ஆம். இது சிறுவர் சிறுமியருக்கு மட்டும் அல்ல வயது வந்தவர்களுக்கும் பொறுத்தமானது. யார் எந்த வேலையைச் செய்தாலும் ஏனோதானோ என்று செய் யாமல் அதில் முழுமையாக ஈடுபட்டுச் செய்து முடிக்க வேண்டும். மக்களின் கடினமான உழைப்பாலே நாட் டின் முன்னேற்றம் தொடர்ந்து ஏற்பட்டுக் கொண் டிருக்கும். இதற்கு எடுத்துக்காட்டு இரண்டாவது உலகப் போரில் சீர்குலைந்த ஜெர்மனியும் ஜப்பானும் தற் போது அடைந்துள்ள முன்னேற்றமே.

எனவே நாம் நம் கடமையை முழுமையாக அந்த ரங்க சுத்தியுடன் செய்து கடின உழைப்பை அளித்து நாட்டின் முன்னேற்றம் கண்டு மகிழ்ச்சியுடன் இருப் போமாக.


மதிமுகம்: 90 பிப்ரவரி 1992 புன்னகை: 2

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00


C. HITRA

# பெற்றோரின்  அக்கறை
























ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் - பாசத்தின் சின்னம்.

**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்போரேஷன் ஆப் இந்தியா**

AMRITA BHARATI

செய்திகளும் தகவல்களும்

# ஹெல்மெட் கோலுக்கு நேரு நினைவுப் பரிசு

நாற்பத்தேழு ஆண்டுகளுக்கு முன் நம் நாடு விடுதலை பெற்றுப் பிரிவினைக்கு உள்ளாகியது. ஆனால் நாற்பத்தாறு ஆண்டுகளுக்குப் பின் பிரிந்த ஒரு நாட்டின் இரு பகுதிகள் மீண்டும் ஒன் றாகி தற்போது ஒரே நாடாக விளங்கு கிறது. இப்படி ஒன்று சேர்க்கப் பாடு பட்ட அந்நாட்டுத் தலைவரைத்தான் நம் நாடு கௌரவித்து பாராட்டுகிறது. உல கில் நாடுகளிடையே நட்புறவை வளர்த்து வலுப்படுத்த அமைதி முறையில் ஜனநாயக ரீதியில் பாடுபட்ட வருக்கு அளிக்கப் படும் நேரு நினை வுப் பரிசு 1990 ஆண்டிற்காக மேற்கு கிழக்கு ஜெர்மனி களை ஒன்று சேர்த்து ஒரே ஜெர்மனியாக ஆக்கிய ஹெல்மெட் கோலுக்கு கொடுக் கப்பட்டு கௌரவிக்கப்படுகிறது.

நேரு பிறந்த நாளான நவம்பர் 14ந் தேதியன்று இந்தப் பரிசை அறி வித்தார்கள். 1989க்கான நேரு நினை வுப் பரிசு தென்னாப்பிரிக்காவில் நிற வெறியை எதிர்த்துப் போராடி வரும் ஜிம்பாவே அதிபர் டாக்டர். ராபர்ட் மொகாபேக்கு அளிக்கப்பட்டது.

கடைசி ஜெர்மனியச் சக்கரவர்த்தி கெய்ஸர் வில்ஹெல்ம் காலத்திலும் அதற்குப்பின் அடால்ப் ஹிட்லர் காலத் திலும் ஜெர்மனி ஒரே நாடாக இருந்தது. 1939ல் ஜெர்மனி போலண்டை ஆக்கிர மித்ததால் உலகப் போர் முண்டது. 1945ல் போரில் ஜெர்மனி தோற்ற போது ஹிட்லர் தற்கொலை செய்து கொண்டார்.

தோற்ற ஜெர்மனி நான்கு பகுதிகளா கப் பிரிக்கப்பட்டது. இவை அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ், ரஷ்யா ஆகிய நான்கு நாடுகளின் இராணு வத்தின் ஆட்சியில் வந்தன. 1949ல் ஜெர் மனியின் கிழக்குப் பகுதி பெர்லின் நக ரின் கிழக்குப் பகுதி யைத் தலைநகராகக் கொண்டு ஜெர்மன் ஜனநாயகக் குடி யரசு என்ற பெயரோடு தனி நாடா கியது. ஜெர்மனியின் மேற்குப் பகுதி பான்நகரைத் தலைநகராகக் கொண்டு பெடரல் ஜெர்மன் குடியரசு எனப் பெயர் கொண்டு தனி நாடாக 1954 முதல் இயங்கியது.

கிழக்கு ஜெர்மனியில் 1953ல் நடந்த கலகத்தை சோவியத் இராணுவம் அடக்கியது. இதனால் கிழக்கு ஜெர்மனி மக்கள் மேற்கு ஜெர்மனிக்குத் தப்பி ஓட முயலவே அவர்களைத் தடுக்க பெர்லின் மதிர்சுவர் கூடக் கட்டப்பட்டது.

இரு ஜெர்மனிகளிடையே 1973ல் நல்லெண்ணம் நிலவலாயிற்று. 1976ல் கிழக்கு ஜெர்மன் குடியரசின் அதிபராக எரிக்ஹோனேகர் ஆனார். அவர் ரஷ்யாவின் நண்பராக இருந்தும் 1987ல் முதல் முறையாக மேற்கு ஜெர்மனிக்கு விஜயம் செய்தார். அப்போது மேற்கு ஜெர்மனியின் அதிபர் சான்ஸவர் ஹெல்மெட் கோல்.






இரு ஜெர்மனிகள் இணைந்து ஒரேநாடாக வேண்டும் என ஹெல்மெட் கோல் செய்துவந்த முயற்சியை 1992ல் கூடிய பனிரெண்டு நாடுகள் கொண்ட ஐரோப்பியக் கௌன்சில் பாராட்டி ஊக்கம் அளித்தது அப்போது முதல் டாக்டர் கோல் ஐரோப்பிய அரசியல் தலைவர்களில் முதலிடம் பெற்றார். 1990 அக்டோபர் 3ந் தேதி இரு ஜெர்மனிகளும் இணைந்தன. பெர்லின் மதில் சுவர் தகர்க்கப்பட்டது. இப்போது ஜெர்மனி மூன்று கோடி மக்களைக் கொண்டு ஒரே பொருளாதர அடிப்படையில் இயங்கி உலகில் ஒரு வல்லரசாகத் திகழும் நிலையை அடைந்து விட்டது.

டாக்டர் கோல் 1990ல் நடந்த தேர்தலில் ஜெர்மன் சான்ஸலராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் தமது உரை ஒன்றில் நாடுகள் மோதிக் கொள்ளாத உலக அமைப்பை ஏற்படுத்தத் தாம் மகாத்மா காந்தி, நேரு ஆகியோரின் வழி முறைகளையும் பின் பற்றப் போவதாகக் கூறினார்.

ஒன்றுபட்ட ஜெர்மனி நிறுவப்பட்டு ஐரோப்பாவின் வரலாற்றில் ஒரு புதிய சகாப்தம் ஆரம்பமானது டாக்டர் கோலால் என்று தீர்மானித்து அவருக்கு நேரு நினைவுப் பரிசை அளித்து அதற்காக நிறுவப்பட்ட குழு அவரைப் பாராட்டி கௌரவித்துள்ளது.




மங்களபுரி மன்னன் மதனசேனனுக்கு இலக்கியத்தில் மிகுந்த பிடிப்பு இருந்தது. அதனால் அவன் தன்னைக் காணவந்த கவிஞர்களையும் பண்டிதர்களையும் கௌரவித்துப் பரிசளித்து வந்தான். அவனது ஆஸ்தான பண்டிதர் ஆனந்தபட்டர் என்பவர் தாம் பண்டிதர்களில் முதலிடம் பெற்றவர்.

மதனசேனன் இலக்கிய ரசிகனான போதிலும் அவனது முதலமைச்சர் கோபிநாதன் பண்டிதர்களை வெறுத்தே வந்தான். பணத்திற்கு முன்பு படிப்பு எம்மாத்திரம் என்பது அவனது அசைக்க முடியாத நம்பிக்கை.

மதனசேனனுக்கு கோபிநாதனின் இந்தப் போக்கு பிடிக்கவில்லை. அதனால் அவன் "நீங்கள் இலக்கியம் பற்றிச் சரியாகத் தெரிந்து கொள்ளாததால் இப்படிக் கூறுகிறீர்கள்" என்றான். அதற்கு கோபிநாதன் "எனக்கு இலக்கிய ரசனையோ, கலைகளைப் புரிந்து கொள்ளும் ஆற்றலோ இல்லாது இருக்கலாம். ஆனால் நடைமுறை வாழ்க்கைக்கான அனுபவம் உள்ளது. அது உங்களுக்கும் இருந்திருந்தால் இப்படிக் கூறி இருக்க மாட்டீர்கள்" என்றான். மன்னனோ இதை ஏற்கவில்லை.

ஒருமுறை மன்னனும் முதலமைச்சரும் அந்நாட்டிலேயே புகழ் பெற்ற ஒரு குருகுலத்தை காணச் சென்றனர். அதனை நடத்தி வந்தவர் சித்தானந்தர். மற்ற குருகுலத்தில் படிக்கும் மாணவர்களை விட அங்கு படித்த மாணவர்களுக்குதான் மதிப்பு அதிகம்.

மதனசேனன் சித்தானந்தரைக் கண்டு "ஐயா! உங்கள் குருகுலத்து மாணவர்கள் மட்டும் மற்ற குரு

—சிவனார் செல்வன்—



குல மாணவர்களை விடச் சிறந்து விளங்குகிறார்களே. இதற்கு என்ன காரணம்?'' என்று கேட்டான்.

சித்தானந்தரும் சிரித்தவாறே ''அரசே, இங்கு படிப்பை முடித்த மாணவர்களுக்கு தங்கள் ஆஸ்தான பண்டிதர் எழுதிய நூல்களில் ஒன்றைக் கொடுத்து அதில் இருக்கும் தவறைக் கண்டுபிடித்தாலே அவர்களுக்கு சிறப்புச் சான்றிதழ் கொடுப்பேன்'' என்றார்.

அதைக் கேட்ட மன்னன் கோபம் கொண்டு ''ஓகோ! என் ஆஸ்தான பண்டிதரின் படைப்பில் தவறு கண்டு பிடிப்பதுதான் உங்கள் மாணவர்களின் வேலையா? இது எனக்கும் என் ஆஸ்தான பண்டிதருக்கும் செய்யப்படும் பெரிய அவமானம்'' என்றான்.

சித்தானந்தர் பணிவுடன் ''அரசே! மகாபண்டிதரான ஆனந்த பட்டரின் நூலின் பிழையைக் கண்டுபிடிப்பது என்பது சாதாரண வேலை அல்ல. அதற்கு நல்ல படிப்பு வேண்டும். என் மாணவர்களின் திறமையைப் பரிசோதிக்க ஆனந்தபட்டரின் நூலை தேர்ந்தெடுத்தேன் என்றால் அது அவருக்கும் அவரை ஆதரித்துவரும் உங்களுக்கும் சரி பெருமை அளிக்கக் கூடிய விஷயமாகும். இதனால் அவரது மதிப்பு உயர்கிறதேயொழிய அவருக்கு அவமானம் ஏற்படாது'' என்றார்.

அதைக் கேட்ட மதனசேனன் கோபம் தணிந்து ''சரி. இதுவரை உங்கள் குருகுலத்திலிருந்து சிறப்புச் சான்றிதழ்கள் பெற்றவர்கள் எவ்வளவு பேர்?'' என்று கேட்டான். சித்தானந்தரும் ''அது பற்றி என்ன சொல்ல இருக்கிறது! சென்ற ஆண்டுவரை ஒரு ஆண்டிற்கு இரண்டு அல்லது மூன்று பேர்கள் வீதம் சிறப்புச் சான்றிதழ்கள் பெற்று வந்தார்கள். ஆனால் இந்த ஆண்டில் பதினைந்து மாணவர்கள் அச் சான்றிதழ்கள் பெறத் தகுதி பெற்றிருக்கிறார்கள். ஆனால் இந்த மாணவர்கள் எல்லோரும் சாதாரண அறிவு படைத்தவர்களாக இருப்பதுதான் எனக்கு ஆச்சரியத்தை அளிக்கிறது'' என்றான்.

அதைக் கேட்டுக் கொண்டிருந்த கோபிநாதன் "இதில் வியப்படைய என்ன இருக்கிறது? இந்த குருகுலத்திலிருந்து வரும் மாணவர்களுக்கு மன்னர் கண்ணை மூடிக் கொண்டு உயர்பதவிகளை அளித்து விடுகிறார். அதனால் வேறு யாரோ ஒரு மகாபண்டிதர் ஆனந்தபட்டரின் நூலில் உள்ள பிழைகளைக் கண்டு பிடித்து இந்த மாணவர்களுக்குத் தெரியப்படுத்தி இருக்கிறார் என்பது தெளிவாகிறது. அந்தப் பண்டிதர் இந்த மாணவர்களிடம் பணம் வாங்கிக் கொண்டு தான் அப்பிழைகளை இவர்களுக்கு எடுத்துக் கூறி இருப்பார்" என்றான்.

அதைக்கேட்டு மன்னன் ஆச்சரியப்பட்டான் "இது பற்றி விசாரிக்க வேண்டும்" என அவன் கூறி அப்பணியை சில வேவுகாரர்களிடம் ஒப்படைத்தான். வேவுகாரர்களும் சம்மந்தப்பட்டவர்களை எல்லாம் விசாரித்துவிட்டு வரவே, அவர்கள் கூறியதைக் கேட்ட மன்னன் தன் முதலமைச்சர் கூறியதில் உண்மை இருப்பதை கண்டான். தலைநகரிலிருந்து சற்று தூரத்தில் உள்ள சிவபுரி என்ற சிற்றூரில் இந்துவதனர் என்ற பண்டிதர் இருப்பதும் அவர்தாம் ஆனந்தபட்டரின் நூல்களிலுள்ள பிழைகளைக் கண்டு பிடித்து மாணவர்களிடம் பணம் வாங்கிக் கொண்டு அவற்றைக் கூறிவருவதாயும் தெரியவந்தது.

மன்னன் மதனசேனன் இந்துவதனரின் இல்லத்திற்குப் போய் அவரைக் கண்டு "பண்டிதரே! நீங்கள் இப்படிச் செய்வது சரியா?





உங்களது செய்கையால் அதிக அறிவில்லாத மாணவர்கள் கூட சித்தானந்தரின் குருகுலத்திலிருந்து சிறப்புச் சான்றிதழ்கள் பெற்றுக் கொண்டு விடுகிறார்களே. உங்களது புலமையை இப்படி ஏன் தவறான வழியில் பயன்படுத்துகிறீர்கள்?'' என்று கேட்டான்.

இந்துவதனரும் மன்னனை வணங்கி ''அரசே! இன்றாவது நான் இந்த விதமாகத் தங்களைக் காணும் பாக்கியம் பெற்றேனே. இதற்காக மகிழ்ச்சி அடைகிறேன். நீங்கள் சித்தானந்தரின் குருகுல மாணவர்களை எவ்விதத் தேர்வும் இல்லாமல் உயர்பதவிகளுக்கு நியமிப்பதை நான் அறிந்தேன். நானோ ஏழை. தங்கள் ஆஸ்தானத்தில் இடம் பெற பலமுறை தலைநகர் வந்து தங்களை பேட்டி காண முயன்றேன். ஆனால் தங்களது ஆஸ்தான பண்டிதர்தான் நந்தி போல இருந்து எனக்குத் தங்களை பேட்டி காணும் வாய்ப்பு இல்லாமல் செய்துவிட்டார். என் புலமை அவருக்கும் மேலானது எனத் தாங்கள் நேரில் கண்டுவிட்டால் எங்கே தம் பதவி போய்விடுமோ என்ற பயம் அவருக்கு ஏற்பட்டு விட்டது. அதனால்தான் நான் ஏழ்மையில் உழல்கிறேன். தகுதியற்ற மாணவர்களுக்கு நான் ஆனந்த பட்டரின் நூலிலுள்ள பிழைகளைக் காட்டி மாணவர்களிடம் பணம் பெற்றது என் வாழ்க்கையை நடத்தவே. மகாபண்டிதர் எனக்கூறிக் கொள்பவரின் நூலில் பிழைகள் உள்ளதை நான் கண்டுபிடித்துக் கூறினேன் என்றால் நீங்களே என்னையும் அவரையும் ஒப்பிட்டு ஒரு முடிவுக்கு வரலாம்'' என்றார்.

மன்னனோ ''இல்லை. பணம் வாழ்க்கையை நடத்த உதவுவதே. ஆனால் இலக்கியம் ஒரு கலை. எனவே பணத்தையும் படிப்பையும் ஒப்பிடுவது சரியல்ல. ஒரு பண்டிதர் தம் வாழ்க்கையை நடத்த படிப்பை விற்கிறார் என்று குற்றம் சாட்டுவதற்கு முன் அவர் வாழ நாம் ஏதாவது வழி செய்தோமா என்று சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். நீங்கள் இவ்வாறு செய்

வதற்குக் காரணம் நான்தான். ஆனால் உங்களைப் போன்றவர்கள் படிப்பை விடப் பணமே சிறந்தது என்று நினைக்க காரணம் ஆனந்தபட்டர் போன்ற சுயநலக் காரர்கள் இருப்பதால்தான்'' என்றான்.

இதற்குப் பின் மதனசேனன் ஆனந்தபட்டரை ஆஸ்தான பண்டிதர் பதவியிலிருந்து விலக்கி விட்டு இந்துவதனரை அப்பதவியில் அமர்த்தினான். மேலும் எந்தக் கவிஞரோ பண்டிதரோ தன்னைக் காண வந்தால் அவர்கள் மிக எளிதில் தன்னைச் சந்திக்கும் முறையை மன்னன் ஏற்படுத்தினான்.

ஒருநாள் மன்னன் பேச்சுவாக்கில் இந்துவதனரிடம் "பண்டிதரே! நீங்கள் ஆஸ்தானப் பண்டிதராகி விட்டதால் சித்தானந்தரின் குருகுலந்து மாணவர்களுக்குச் சான்றிதழ்களை அளிக்க உங்கள் நூல்களையே தரமானதாகக் கருதி எடுத்துக் கொள்வார்கள். இதனால் உங்கள் படைப்புகளிலுள்ள தவறுகளைக் கண்டுபிடிக்கும் மாணவர்கள் மட்டும் சான்றிதழ்கள் பெறுவார்கள் எனக் கருதலாமா?'' என்று கேட்டான்.

அதற்கு இந்துவதனர் "வேண்டாம் அரசே! இதற்கு முன் நான் செய்து வந்த வேலையை வேறு யாராவது ஒரு பண்டிதர் செய்யும் வாய்ப்பு ஏற்பட்டுவிடும். அப்படி நடக்க கூடாது'' என்றார். மன்னனும் "இப்போது இலக்கியப் படைப்பாளர்களின் நிலை முன்போல இல்லை. புலமைமிக்க பண்டிதர் யாரும் என்னை எளிதில் காண முடியும். எனவே சித்தானந்தரது குருகுல மாணவர்களில் ஒருவன் கூட சிறப்பு சான்றிதழ் பெறக் கூடாது என்பதே என் விருப்பம்'' என்றான்.

மன்னன் பண்டிதர்களை ஆதரிக்க விரும்பும் ஆர்வத்தைக் கண்டு இந்துவதனர் மெய்சிலிர்த்து நின்றார்.



# சூரப்புலி

**கா**ட்டூர்வாசியான கந்தசாமி அவ்வூரை அடுத்து இருந்த பயங்கரக் காட்டில் ஒரு இரவு முழுவதும் இருந்துவிட்டு வந்ததைக் கண்ட ஊர்க்காரர்கள் அவனது தைரியத்தைப் பாராட்டினார்கள். இந்த விஷயம் அந்த ஊர் ஜமீன்தாரருக்கு தெரிய வரவே அவனை ஒரு பொதுக்கூட்டத்தில் பாராட்டி பரிசளிக்க நினைத்தார். அதனால் அவனை அழைத்து வரும்படித் தன் வேலையாளை அனுப்பினார்.

அந்த வேலையாள் கந்தசாமியின் வீட்டிற்குப் போனபோது அவன் இருக்கவில்லை. அவனது மனைவி மட்டும் இருந்தாள். அவளிடம் அவன் கந்தசாமியின் தைரியத்தைப் பாராட்டிப் பரிசளிக்கப் போவதைக் கூறினான்.

அவளும் ''பரிசா? அதை அவர் எனக்குத்தான் கொடுக்க வேண்டும். ஏனென்றால் என் கணவன் அன்று காலையில்சம்பாதித்த கூலியை மாலையில் சூதாட்டத்தில் இழந்துவிட்டு வீட்டிற்கு வந்தான். நான் அப்போது, அவனிடம் பணத்தோடு வந்தால் தான் வீட்டிற்குள் அடி எடுத்து வைக்கலாம் என்று கூறித் துரத்திவிட்டேன். எனக்கு பயந்து இரவு முழுவதும் காட்டில் ஒளிந்து கொண்டிருந்துவிட்டு இன்று காலைதான் கூலி வேலை செய்யப் போயிருக்கிறான். அவன் மாலையில்தான் வருவான். அதனால் ஜமீன்தாரர் அவனுக்குக் கொடுக்கப்போகும் பரிசை என்னிடம் கொடுக்கட்டும்'' என்றாள்.

வேலையாள் திரும்பிப்போய் ஜமீன்தாரரிடம் விஷயத்தைச் சொல்லவே அவர் பலமாகச் சிரித்து ''உண்மைதான். பரிசை அந்த சூரப் புலி கந்தசாமிக்குக் கொடுக்காமல் அவன் மனைவிக்குத்தான் கொடுக்க வேண்டும். ஏனென்றால் காட்டில் அவன் இரவில் தனியாக இருக்கச் செய்தவள் அவள்தானே'' என்றார்.





# விநோதனின் விசித்திர யாத்திரைகள்

## 11

*[சதானந்தரின் கட்டளைப்படி அநியாயக்காரர்களை ஒழிக்க விநோதன் ருத்திரபுரிக்கு வந்தான். ருத்திரபுரி இளவரசி கிருஷ்ணகுமாரியின் நவரத்தின மாலையில் உள்ள சந்திரகாந்தக் கல்லை அபகரிக்க அந்நாட்டு முதலமைச்சனும் அவனது நண்பனான மந்திரவாதியும் திட்டம் போட்டதை மறைந்திருந்து விநோதன் கேட்டு விட்டான். அதன் பிறகு—]*

மந்திரவாதி முதலமைச்சனின் மாளிகையிலிருந்து வெளிவந்த போது நள்ளிரவிற்கு மேலாகி விட்டது. அவன் கருப்புநிற ஆடையை அணிந்திருந்தால் இருட்டில் அவனை யாரும் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. ஆனால் விநோத னுக்கு அவன் தென்பட்டுக் கொண்டு தான் இருந்தான்.

விநோதன் அவனைப் பின் தொடர்ந்தவாறே தனக்குள் "இவ னுக்கு சந்திரகாந்தக் கல் எதற்கு? அதற்கு பூஜை ஏதாவது செய்யப் போகிறானா? எப்போது செய் வான்? அதனை முறைப்படி செய்ய இவன் யாருடைய உதவியை நாடு வான்? இவற்றை அறிய வேண் டும்" என எண்ணியவாறே அவன் பின்னால் சென்றான்.

விநோதனுக்குத்தான் யார் கண்



ணிலும் படாமல் யாரையும் பின் தொடர்ந்து செல்ல முடியுமே, அத் தகைய சக்தியை அடைய அவனுக்கு முனிவர் சதானந்தர் மந்திரோப தேசம் செய்திருந்தாரே. அதை அவன் பயன்படுத்திக் கொண்டான்.

மந்திரவாதி சுற்றிலும் பார்த்த வாறே தன்னை யாரும் பின் தொடரவில்லை என உறுதி செய்து கொண்டு நகருக்கு வெளியே வந்து விட்டான். அவன் ஓரிடத்திலுள்ள புதரின் பக்கம் நின்று குரல் கொடுக் கவே அதிலிருந்து ஒரு கரடி வெளியே வந்தது. மந்திரவாதி அதன் மீது ஏறி அமர்ந்து கொள்ள அது வெது வேகமாகக் காட்டை நோக்கி ஓடியது.

அந்த வேகத்திற்கு ஈடு கொடுத்து விநோதனும் அதனைப் பின் தொடர்ந்தான். சற்று நேரத்தில் அவர்கள் ஒரு ஆற்றின் கரையை அடைந்தார்கள். அப்போது மந் திரவாதி அதன் மீதிருந்து கீழே இறங்கி "சரி, நீ போய் ராட்சஸ ஆலமரத்தின் கீழ் இரு. நான் என் முக்கியமான வேலையைச் செய் தாக வேண்டும். அதற்கு எவ்வளவு நேரம் பிடிக்கும் என்று சொல்ல முடியாது. அதனால் நான் திரும்பி வரும் வரை காத்திரு. நான் வந்த பிறகு போகலாம்" என்றான். கரடி யும் சரி என்று தலையை ஆட்டி விட்டு இருளில் சென்று மறைந் தது.

அது போனபின் மந்திரவாதி ஆற்றை அணுகி மூன்று முறை கை தட்டினான். மறுநிமிடம் ஆற்று நீரைக் கிழித்துக்கொண்டு ஒரு முதலை வெகு வேகமாக நீந்திய வாறே மந்திரவாதி நின்ற இடத் திற்கு வந்தது. அது அருகில் வந்து நின்றதும் மந்திரவாதி குதித்து அதன் முதுகின் மீது ஏறி அமர்ந்து கொண்டு "உம். வேகமாகப் போ" என்று கட்டளை இட்டான். முதலை யும் மேற்கு திசையில் அம்புபோல விர்ரென்று நீந்திச் செல்லலா யிற்று.

விநோதனும் அது சென்ற திசை யிலே வேகமாகப் பின் தொடர்ந்து சென்றான். வானத்தில் விண்மீன் கள் மின்னிக் கொண்டிருந்தன.



ஆற்றின் இருபுறங்களிலிருந்து நரிகளும் ஓநாய்களும் ஊளை இடும் சத்தம் கேட்டுக்கொண்டே இருந்தது. கோட்டான்கள் கூவிக் கொண்டிருந்தன. இவற்றை எல்லாம் கேட்டு விநோதன் பயந்துவிட வில்லை. அவன் மந்திரவாதியின் மீது கண் வைத்து அவனை பின் தொடர்ந்து சென்று கொண்டிருந் தான்.

கொஞ்சதூரம் போனதும் அந்த ஆறு இரு பிரிவுகளாகப் பிரிந்து செல்வதை விநோதன் கண்டான். அவற்றில் ஒரு பிரிவு குறுகிய இடைவெளியில் பாறைகளுக்கு மத்தியில் சுரங்கம் போன்ற இடத்தில் பாய்ந்து சென்றது. முதலை அந்த மை இருட்டில் கூட அந்தச் சுரங்க வழியில் எவ்வித சிரமமும் இல்லாமல் சென்றது. அதுவரை கரை ஓரமாகவே முதலையைப் பின் தொடர்ந்து வந்த விநோதன் அதனை மேலும் பின்தொடர ஆற்றில் குதித்து நீந்தியவாறே அதன் பின்னால் செல்லலானான்.

முதலை ஒரு குகையின் வாயிலருகே போய் நின்றது. மந்திரவாதியும் அதன் முதுகிலிருந்து குதித்து ஒரு பாறை மீது நின்றான். விநோதனும் அவனருகே நின்றான். ஆனால் விநோதன் தன் பின்னால் நின்று கொண்டிருப்பதை மந்திரவாதி அறியவும் முடியவில்லை. காணவும் முடியவில்லை. அப்போது குகைக்குள் இருந்து ஒரு கரகரத்த குரல் "யாரது?" என்று கேட்டது. அப்படிப்பட்ட குரலை விநோதன் அதற்கு முன் கேட்டதே இல்லை. அது ஒரு கிழவியின் குரலாகத் தான் இருக்க வேண்டும் என அவன் மனம் கூறியது.

மந்திரவாதியும் "நான்தான் உன்தாசன் வீரவிகடன். நான் உள்ளே வரலாமா?" என்று பணிவுடன் கேட்டான். அப்போது அந்தக் குரல் "அதுசரி. உன்னோடு இன்னொருவன் இருக்கிறானே. அவன் யார்?" என்று கேட்டது. மந்திரவாதியும் சுற்றிலும் பார்த்தவாறே "என்னையும் இந்த முதலையையும் தவிர இங்கு வேறு யாரும் இல்லையே" என்றான் ஆச்சரியப்

பட்டவாறே.

அப்போது அந்தக் குரல் "அட முட்டாளே! உன்னைச் சுற்றி நன்றாகப் பார் தெரியும்" என்றது. அந்தக் கிழவி தான் வந்திருப்பதைத் தெரிந்து கொண்டுவிட்டாள் என்பதை விநோதன் புரிந்து கொண்டான். உடனே சதானந்தர் உபதேசித்த மந்திரத்தை உச்சரித்து மாயமாய் மறைந்தான்.

மந்திரவாதி சுற்றிலும் பார்த்து விட்டு "தாயே! இங்கே வேறு யாருமே எனக்குத் தென்படவில்லையே. இந்தப் பகுதியில் தற்போது என்னையும் அந்த முதலையையும் தவிர வேறு எந்தப் பிராணியும் இங்கு இல்லை" என்றான். கிழவியும் "சரிதான். சற்று முன் உன் பின்னால் யாரோ நின்று கொண்டிருந்தது போல எனக்குத் தெரிந்தது. ஆனால் இப்போது யாரும் இல்லை தான். இனியும் நீ ஏன் அங்கே நிற்கிறாய்? உள்ளே வா" என்று அழைக்கவே வீர விகடனும் குகைக்குள் சென்றான்.

விநோதன் மந்திரவாதிக்கும் கிழவிக்கும் நேராக தென்படாமல் மறைந்து வேறிடத்திற்குச் சென்றான். அவன் அக்குகையைச் சுற்றிப் பார்த்து ஒரு பாறையின் மறைவில் உட்கார்ந்து கொண்டு மந்திரவாதியும் கிழவியும் என்ன பேசிக் கொள்ளப் போகிறார்கள் என்பதைக் கேட்கத் தயாரானான்.



மனித மண்டை ஓடு ஒன்று அக்குகைக்குள் இருந்தது. அதில் மஞ்சள் நிறத்தில் நெருப்பு எரிந்து கொண்டிருந்தது. கிழவி அந்தக் குகையில் ஒரு பக்கம் காலை நீட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவளது வயது என்ன எனத் தீர்மானிப்பது கடினமே: அவளைப் பார்த்தால் முன்னூறு வயதைத் தாண்டி இருப்பாள் என்றே கூற முடியும். உடலில் பல சுருக்கங்கள். சதைப்பற்றே இல்லாத உடல். ஆனால் அவளது இரு கண்கள் மட்டும் ஒளி விட்டு பிரகாசித்தன. அவளது கைவிரல் நகங்கள் சுருண்டு கிடக்கும் பாம்புகளைப் போல இருந்தன.

கிழவியும் மந்திரவாதியைப் பார்த்து "என்ன விஷயம்? உன்



முயற்சி பலித்ததா?'' என்று கேட்டாள். வீரவிகடன் அவளது கால்களின் மீது விழுந்து வணங்கி எழுந்தான். பிறகு அவன் ''ஆம். இப்போது அந்த சந்திரகாந்தக்கல் இளவரசியிடம் வந்துவிட்டது. அது அவள் அணியும் நவரத்தினமாலையில் உள்ளது. அது விரைவிலேயே எனக்குக் கிடைத்துவிடும் என்றே எண்ணுகிறேன்'' என்றான்.

''நீ அடையப் போவது அந்த சந்திரகாந்தக்கல் ஒன்றை மட்டும் தானா?'' என்று கேட்டாள் கிழவி. வீரவிகடன் அதுகேட்டு பதில் எதுவும் சொல்லத் தெரியாமல் திகைத்தான். அவனது நிலைக்கண்டு கிழவி பயங்கரமாகச் சிரித்தாள்.

மந்திரவாதியும் ''தாயே! நீ கேட்டதன் உட்பொருள் என்ன என்று எனக்குத் தெரியவில்லையே. அந்தக் கல்லோடு இன்னும் வேறு எதையாவது நான் கொண்டுவர வேண்டுமா?'' என்று கேட்டான்.

கிழவியும் ''எனக்கு வேறு என்ன வேண்டும்? நீ உயிருக்கு உயிராய் மதிக்கும் அந்த சந்திரகாந்தக் கல் கூட எனக்கு வேண்டியதில்லையே'' என்றாள். மந்திரவாதியும் ''ஆமாம் தாயே. நீ விரும்பவில்லை. வழியும் கூறினாய். அதுவும் எனக்காகத் தானே. என்மீது இவ்வளவு கருணை காட்டியதற்கு நான் எப்படித்தான் கைம்மாறு செய்யப் போகிறேனோ?'' என்றான்.

கிழவியும் ''கருணையாவது! கருணைக் கிழங்காவது? அதெல்லாம் ஒரு மண்ணாங்கட்டியும் இல்லை. எனக்கு எதன்மீதும் பற்றுதல் இல்லை. அதிகாரம் செலுத்தவும் ஆசைப்படவில்லை. நீ என்னவோ மன்னாதி மன்னனாக வேண்டும் என்று துடித்துக் கொண்டிருக்கிறாய். அதற்கு வழி என்ன என்பது எனக்குத் தெரியுமாதலால் உனக்கு உதவுகிறேன். நீ ஒரு சிறு நாட்டின் மன்னனாக ஆகாமல் இந்த உலகையே ஆளும் சக்கரவர்த்தியாகச் செய்து விடுகிறேன் பார்'' என்றாள்.

வீரவிகடனும் ''ஆகா! இதற்கு நான் என்ன செலுத்துவதோ!'' என்றான். கிழவியும் ''ஆம். நான்

செய்யும் இந்த உதவிக்கு பதில் உதவியாக நீ ஒன்று செய்ய வேண்டும்'' என்றாள். மந்திரவாதியும் "ஆகா. சொல் தாயே. உடனே செய்கிறேன்'' என்றான்.

கிழவியும் "நான் இழந்த இளமையை மீண்டும் பெற வேண்டும். அதனால் நீ அந்த சந்திரகாந்தக் கல்லை இங்கே கொண்டுவரும் போது அந்த இளவரசியையும் இங்கே அழைத்து வரவேண்டும். அந்த இளவரசியின் இளமையை எடுத்து அதனை நான் என் உடலில் புகுத்திக் கொள்வேன்'' என்றாள்.

அப்போது வீரவிகடன் "இதற்கு முன் நீ பல இளம் பெண்களைக் கொண்டு வந்து அவர்களது இளமையைப் பெற அவர்களை பலியிட்டாயே. ஆனால் இதுவரை நீ ஏன் வெற்றிபெறவில்லை?'' என்று கேட்டான். கிழவியும் "அதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. அவற்றை எல்லாம் நான் உனக்குச் சொல்லிக் கொண்டிருக்க முடியாது. இந்த ருந்திரபுரி இளவரசி எல்லா லட்சணங்களும் குறைவில்லாமல் பெற்றிருப்பவள். அவளது இளமையை மட்டும் என் உடலில் புகுத்திக் கொண்டு விட்டால் நான் எவ்வளவு அழகாக ஆகி விடுவேன் தெரியுமா?'' எனச் சிரித்துக் கொண்டே கூறினாள்.

"நீ இப்போதும் அழகாகத்தானே இருக்கிறாய்?'' என்று வீரவிகடன் கூறவே கிழவியும் "போதும் உன் முகஸ்துதி. உன் வேலை ஆக வேண்டும் என்பதற்காக என்னை இப்படிப் புகழ்கிறாய். நான் சொன்னபடி செய்வதற்குச் சம்மதித்தால் இங்கே இரு. இல்லாவிட்டால் இப்போதே இங்கிருந்து போய் விடு''. என்று பயங்கரமாகக் கத்தினாள்.

அதைக் கேட்டு மந்திரவாதி மட்டுமல்ல, விநோதனும் திகைத்துப் போனான்.

(தொடரும்)



# அய்யாவின் கட்டளை!

வீரகேது மன்னனிடம் வைத்தி என்ற சமையல்காரன் இருந்தான். அவன் மன்னனுக்கு மட்டுமே உணவு சமைப்பான். வேறு யாருக்கும் சமைக்க மாட்டான். இதை அரண்மனையில் எல்லோரும் அறிவார்கள்.

ஒருமுறை ராணி வைத்தியைக் கூப்பிட்டு "என் தம்பி வந்திருக்கிறான். நீ மன்னருக்குச் சமைக்கும் சமையலில் அவனுக்கும் சேர்த்து சமை" என்றாள். வைத்தியோ முடியாது என்று கூறிவிட்டான். அதனால் உடனே ராணி மன்னனிடம் வைத்தியின் மீது புகார் கூறினாள்.

மன்னன் வைத்தியை வரவழைத்து விசாரிக்கவே அவனும் "நான் தங்களுக்கு மட்டுமே சமையல் செய்வேன் என்று கூறியது உண்மை" என்றான். அப்போது மன்னன் "சரி. இப்போது நான் உனக்கு நூறு வராகன்கள் கொடுத்து ராணியின் தம்பிக்கும் சேர்த்து சமை என்றால் சமைப்பாயா?" என்று கேட்டான்.

வைத்தியும் சற்றும் தயங்காமல் "ஓ! தாராளமாகச் சமைப்பேன்". எனவே மன்னனும் ஆச்சரியப்பட்டு "இதற்கு முன் எனக்கு மட்டும் நீ சமைப்பாய் என்றாயே. ஆனால் நூறு வராகன் என்றதும் உன் கொள்கை காற்றில் பறந்து விட்டதோ?" என்று கேட்டார்.

வைத்தியும் "இல்லை பிரபுவே! இது அய்யாவின் கட்டளை. அதை மதிக்க வேண்டாமா? அப்படிச் செய்யயாவிட்டால் உங்கள் கௌரவம் அல்லவா போய்விடும்" என்றான்.

அதைக் கேட்ட மன்னன் மகிழ்ந்து வைத்திக்கு இருநூறு வராகன்கள் பரிசாக அளித்தான்.





# தொள்கை மாற்றம்!

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தில் ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின் அவன் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! நீ உன் வாழ்நாள் முழுவதும் இப்படியே கஷ்டப்படுவது என்று தீர்மானித்து விட்டாயா? ஒரு சிலரைப் போல நீ இதற்கென ஏதாவது ஒருமுறை, கட்டுபாடு என்றெல்லாம் வைத்துக் கொண்டிருக்கிறாயா? சில சமயங்களில் இவற்றை மீற வேண்டிக் கூட வரலாம். இதை விளக்க ஒரு கோடீஸ்வரனையும் அவனது நண்பனான ஒரு அரசனையும் பற்றிய கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதையை

## வேதாளம் சொல்லும் கதை



ஆரம்பித்தது.

சுவர்ணகிரி நாட்டில் பல கோடி களுக்கு அதிபனான தனபாலன் என்பவன் இருந்தான். அவன் தயாள குணம் கொண்டவன். அந்நாட்டு மன்னன் பராக்கிரமசேனனின் ஆரு யிர் நண்பன். பொக்கிஷத்தில் பணக்குறைவு ஏற்பட்ட போதெல் லாம் தனபாலன் மன்னனுக்குத் தேவைப்பட்ட பணத்தைக் கொடுத்து பிறகு வாங்கிக் கொள்வான். அப் படிக் கிடைத்த வட்டிப் பணத்தை தனபாலன் ஏழை எளியவர் களுக்கு கொடுத்து உதவி வந்தான்.

தனபாலன் ஓவியக் கலையில் கைதேர்ந்தவன். மற்ற கலைகளி லும் அவனுக்கு மிகுந்த ஆர்வம் உண்டு. அழகான சிற்பங்கள், வண்ண ஓவியங்கள், வேலைப் பாடுடன் கூடிய கைவினைப் பொருள் கள் என்றால் எந்த விலை கொடுத் தாலும் வாங்கி விடுவான். ஆனால் அப்படி வாங்கும் பொருள்களை யார் கேட்டாலும் கொடுக்கவும் மாட்டான்.

மன்னன் பராக்கிரமசேனனுக்கு தனபாலனின் இந்தப் பிடிவாதக் குணம் ஒன்றுதான் பிடிக்காமல் இருந்தது. அதனால் தனபாலனிட மிருந்த அழகிய பொருள்களில் ஒன்றைக் கூடப் பெறமுடியாமல் போவதற்கு அவன் மிகவும் வருந் தினான்.

ஒருநாள் தனபாலனைக் காண கைலாசநாதன் என்பவன் வந் தான். அவன் இளம் வயதினன். கிழிந்த ஆடைகளை அணிந்து தாடி வளர்த்துக் கொண்டிருந்த போதி லும் அவன் உயர் குடியில் பிறந் தவன் என்று தனபாலனுக்குத் தெரிந்து விட்டது. அவன் அந்த இளைஞனை வரவேற்று உட்காரும் படியும் சொன்னான். அந்த இளை ஞனும் "ஐயா! என்னை இந்தக் கோலத்தில் கண்டவர்கள் எல் லாம் விரட்டினார்களே ஒழிய என்னை 'உட்கார்' என்று இது வரை யாருமே சொல்லியதில்லை. மிக்க நன்றி. நீங்கள் கலை அம்சம் கொண்ட பொருள்களை விலைக்கு வாங்கிக் கொள்வதாகக் கேள்விப் பட்டேன். என் பெயர் கைலாச

நாதன். என் முன்னோர்கள் ஜமீன் தாரர்களாக இருந்தவர்கள். எங் கள் வீட்டு அபூர்வ ஓவியம் ஒன் றைத் தங்களுக்கு விற்க எடுத்து வந்துள்ளேன்'' எனக் கூறித் தான் கொண்டு வந்த ஓவியத்தை அவ னிடம் காட்டினான்.

அந்த ஓவியத்தைக் கண்டு தன பாலன் பிரமித்தான். ஒரு தாய் குழந்தையை எடுத்துக் கொஞ்சு வது போன்ற படம் அது. குழந்தை தன் பொக்கை வாயை விரித்து சிரிப்பது மிக அழகாக தீட்டப் பட்டிருந்தது. வண்ணங்கள் கண் களுக்கு குளிர்ச்சி தரும் விதமாகத் தீட்டப்பட்டிருந்தன.



தனபாலன் ''இது கற்பனை யில் தோன்றிய படமாக இல்லை. நேரில் நடப்பதைக் கண்டு இதனை யாரோ வரைந்திருக்கிறார். என்ன நான் சொல்வது சரிதானே'' என்று கேட்டான். கைலாசநாதனும் ''நீங் கள் நினைத்தது சரியே. அந்த ஓவியத்தில் உள்ள பெண்மணி என் தாய். அந்தக் குழந்தை நானே. இதனை வரைந்த ஓவியனுக்கு என் தந்தை நூறு ஏக்கர் நிலம் பரிசாக அளித்தார். ஆனால் இப் போதோ நான் அந்த ஓவியத்தை விற்றுப் பிழைக்க வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கி றேன்'' என்றான்.

தனபாலனும் ''இந்த ஓவியத் திற்கு என்ன விலை வேண்டு மானாலும் கொடுக்கிறேன். நீயே இதன் விலையைச் சொல்'' என் றான். கைலாசநாதனும் ''எனக்கு இதற்காக நூறு பவுன்கள் கொடுத் தால் போதும். அதைக் கொண்டு நான் முன்னுக்கு வந்து விடுவேன்'' என்றான். தனபாலனும் ஆச்சரி யப்பட்டு ''இவ்வளவு குறைவாகக் கேட்கிறாயே'' என்று கேட்க கைலாசநாதன் ''அதற்கு மேல் நான் கேட்க மாட்டேன்'' என் றான். தனபாலனும் நூறு பவுன் களைக் கொடுத்து அனுப்பினான்.

அன்று மாலை தனபாலன் தான் வாங்கிய ஓவியத்தை மன்ன னிடம் காட்டினான். பராக்கிரம சேனனும் அதைப் பார்த்து விட்டு ''ஆகா! எவ்வளவு அழகாக இருக்



கிறது. இதை எனக்குக் கொடுத்து விடு " என்றான். தனபாலனோ "நான்தான் இந்த மாதிரி பொருள் களை யாருக்கும் கொடுக்க மாட் டேன் என்பது உங்களுக்குத் தெரி யுமே. நீங்கள் கேட்டும் பய னில்லை" என்று கூறிவிட்டான்.

சில வருடங்கள் கழிந்தன. ஒரு நாள் தனபாலன் மன்னனுடன் பேசிக் கொண்டிருக்கையில் கைலாச நாதன் அங்கு வந்தான். தனபாலன் அவனை அன்புடன் வரவேற்று மன்னனுக்கும் அறிமுகம் செய்து வைத்தான். பிறகு அவனிடம் தன பாலன் "நீ எப்படி இருக்கிறாய்?" என்று விசாரித்தான்.

அப்போது கைலாச்நாதன் "ஐயா! நீங்கள் கொடுத்த நூறு பவுன்களைக் கொண்டு வியாபா ரம் செய்யத் தொடங்கி இப்போது உயர் நிலையில் இருக்கிறேன். உங்களிடம் ஒரு உதவியை நாடியே இப்போதும் வந்திருக்கிறேன்" என்றான். தனபாலனும் "என்ன வேண்டும" தாராளமாகக்கேள். எனவே கைலாசநாதனும்" நான் அந்த ஓவியத்தைத் தங்களுக்கு விற்ற நாளிலிருந்து எனக்கு மன நிம்மதியே இல்லை. தயவுசெய்து அதை நீங்கள் எனக்குத் திருப்பிக் கொடுத்துவிடுங்கள். அதற்காக நீங்கள் என்ன கேட்டாலும் நான் கொடுக்கிறேன்." என்றான்.

தனபாலனுக்கும் கைலாசநாத னின் மனநிலை புரிந்தது. ஆனால் மன்னனோ தான் கேட்டும் அந்த ஓவியத்தைக் கொடுக்க முடியாது என்று கூறிய தனபாலன் என்ன செய்யப் போகிறான் என்று கூர்ந்து கவனிக்கலானான்.

அப்போது தனபாலன் கைலாச நாதனிடம் "நான் ஒருமுறை ஒரு பொருளை வாங்கிவிட்டால் அதை யாருக்கும் கொடுக்க மாட்டேன் இது என் கொள்கை" என்றான். அப்போது கைலாசநாதன் "என் தாயின்மீது வைத்துள்ள பாசத் தால்தான் அந்த ஓவியத்தைக் கொடுக்கும்படிக் கேட்கிறேன். எனக்காக உங்கள் கொள்கையைக் கொஞ்சம் தளர்த்துங்கள்" என்று வேண்டினான்.



கைலாசநாதனின் மனவேதனையை உணர்ந்த தனபாலன் அவனுக்கு எப்படி உதவலாம் என யோசித்தான். சில நிமிடங்களுக்குப்பின் அவன் "கைலாசநாதா! நீ உன் தாயின் மீது எவ்வளவு அன்பு கொண்டிருக்கிறாய் என்பது தெரிகிறது. அதனால் உனக்கு ஒரு வாய்ப்பு அளிக்கிறேன். நான் ஓவியக் கலையில் ஓரளவு பயிற்சி பெற்றவன் என்பது உனக்கும் மற்றவர்களுக்கும் தெரியும். அதனால் நீ கொடுத்த ஓவியம் போலவே நான் மற்றொரு ஓவியம் தீட்டுகிறேன். இதற்கு ஒருவார காலம் பிடிக்கும். இரண்டு ஓவியங்களில் எது முதலாவது வரையப்பட்டது என்று கண்டு பிடித்து நீ உன் ஓவியத்தை எடுத்துச்செல். இந்தப் பரீட்சைக்கு நம் மன்னரே நடுவர்" என்றான். கைலாசநாதனும் அதற்குச் சம்மதித்தான். ஒரு வாரம் கழித்து வருவதாகக் கூறிச் சென்றான்.

தனபாலனும் ஒரு வார காலத்தில் கைலாசநாதன் கொடுத்த ஓவியம் போல மற்றொரு ஓவியத்தை வரைந்து விட்டான். இரு ஓவியங்களையும் அவன் குறித்த நாளன்று மன்னன் முன் கொண்டுபோய் வைத்தான். கைலாசநாதன் அதே நாளில் அங்கு வந்தான்.

கைலாசநாதன் அந்த இரு ஓவியங்களையும் பார்த்துவிட்டுத் தான் தனபாலனுக்கு விற்ற ஓவியம் எது என்பதைக் கண்டுபிடித்துக் காட்டினான். அப்போது தனபாலன் "கைலாசநாதா! நீ வென்று விட்டாய். அதுதான் நீ எனக்கு விற்ற ஓவியம் அதனை நீ எடுத்துக் கொண்டு போகலாம்" என்றான்.

மன்னனும் அந்த இரு ஓவியங்களையும் மாறிமாறிப் பார்த்து விட்டு "இரண்டு ஓவியங்களும் ஒன்று போலத்தானே உள்ளன. நீ எப்படி நீ விற்ற ஓவியத்தைக் கண்டுபிடித்தாய்?" என்று கேட்டான்.

கைலாசநாதனும் "அரசே! தனபாலர் மிகச் சிறந்த ஓவியர் என்பதில் சந்தேகமே இல்லை. அவர் எவ்வளவு கூர்ந்து கவனித்து



ஓவியம் தீட்டி இருக்கிறார் என்ப தற்கு இந்த ஓவியத்தில் என் தாயின் இடது காதின் ஓரமாக உள்ள சிறு மச்சத்தைக் கூடத்தன் ஓவியத்தில் தீட்டி இருப்பதை எடுத்துக் காட்டலாம். ஆனால் நான் விற்ற படத்தில் என் தாயா ரின் மூக்குத்திக்கல் நீல நிறத்தில் உள்ளது. ஆனால் தனபாலர் தீட் டிய ஓவியத்தில் அது சிவப்பு நிறத் தில் உள்ளது. இந்த சிறு வித்தி யாசத்தைக் கொண்டு என் ஓவி யம் எது என்று கண்டு கொண்டேன். ஆனால் இந்தச் சிறிய தவறை கைதேர்ந்த ஓவியரான தனபாலர் எப்படிச் செய்தார் என்றுதான் எனக்குப் புரியவில்லை'' என்று கூறி அவர்களை வணங்கிவிட்டுத் தன் ஓவியத்தை எடுத்துக் கொண்டு சென்றான் .

அப்போது பராக்கிரமசேனன் தனபாலனிடம் ''தனபாலா! நீ வரைந்த ஓவியத்தில் தவறு எப்படி ஏற்பட்டது என கைலாசநாதன் அறியாமல் போனாலும் நான் அறிந்து கொண்டுவிட்டேன். உன் னிடம் தயாள குணம் இருந்தும் கொடுக்கும் இயல்பு இல்லை என இன்றுவரை நினைத்தேன். அது தவறு என அறிந்து கொண்டேன் நீதியாகச்சுடரே'' எனப் பாராட்டி தான் அணிந்திருந்த முத்து மாலை யைக் கழற்றி அவன் கழுத்தில் போட்டான்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி ''மன்னனே! ஒருமுறை விலை கொடுத்து வாங்கியதைத் திரும்பக் கொடுக்கக் கூடாது என்பதுதானே அவனது கொள்கை. அதனைத் தளர்த்த அவன் கைலாசநாதன் பால் இரக்கம் கொண்டவன் போல நடித்து அவனுக்கு ஒரு பரீட்சையும் வைத்தான். அந்தப் பரீட்சையில் கைலாசநாதன் தோற்று விடுவான் என்று தானே அவன் நினைத்தான் ஆனால் தான் வாங் கிய ஓவியத்தைப் பார்த்து அது போல மற்றொரு ஓவியம் அவன் வரைந்ததில் மூக்குத்தி நிறம் மாறிய தவறைக் கொண்டு கைலாசநாதன் தான் விற்ற ஓவி யம் எது என்று கண்டுபிடித்து

விட்டானே. அப்படி இருக்க பராக்கிரமசேனன் அத்தவறு ஏன் ஏற்பட்டது எனத் தனக்குத் தெரியும் எனக் கூறி தனபாலனைத் தியாகச்சுடர் எனக்கூறியது எவ்வளவுக்கு சரி? இதற்கு நீ சரியான விடை கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் "தனபாலன் தவறு செய்தானா அல்லது இல்லையா என்பது பற்றி ஆராய்வதை விட்டு அவனுக்கும் மன்னனுக்கும் உள்ள தொடர்பை நோக்க வேண்டும். மன்னன் அந்த ஓவியத்தைக் கொடுக்கும்படி கேட்டபோது தனபாலன் தன் கொள்கையில் உறுதியாக இருப்பதாகக் கூறினான். அதனால் கைலாசநாதன் கேட்டதும் அந்த ஓவியத்தைக் கொடுத்தால் மன்னனுக்குக் கோபமே வரும். தாயின் மீது கொண்ட பாசத்தால் கைலாசநாதன் அந்த ஓவியத்தைக் கேட்டபோது அதைக் கொடுக்காமல் இருப்பது மனிதாபிமானம் கொண்டவன் செய்யும் செயலல்ல. இதற்கு வழி காணவே தனபாலன் தான் வரைந்த ஓவியத்தில் மூக்குத்தியின் நிறத்தை வேண்டுமென்றே மாற்றினான். கைலாசநாதன் கண்டிப்பாக முதலாவது ஓவியத்தைக் கண்டுபிடித்து விடுவான் என்பது தனபாலனுக்கு நன்கு தெரியும். சிறு மச்சத்தைக்கூட கவனித்து ஓவியம் வரைந்த தனபாலன் தவறுதலாக மூக்குத்தியின் நிறத்தை மாற்றினான் என்பதை மன்னன் நம்பவில்லை. உண்மையான காரணத்தை அறிந்து கொண்ட மன்னன் தனபாலனை தியாகசுடர் எனப் பாராட்டியது சரியே'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது .



# அதிர்ஷ்ட மச்சம்!

விசித்திரசேனன் என்ற மன்னன் தன் வலது மணிக்கட்டின் மீதிருந்த மிளகு போன்ற மச்சத்தை தன் அதிர்ஷ்ட மச்சம் என்று நம்பினான். இதை அறிந்த சோதிடர்கள் பலர் மன்னனைக் கண்டு அவனது வலது கையில் மணிக்கட்டின் மீதுள்ள மச்சத்தால்தான் அவன் மன்னனாக நிலைத்து இருக்கிறான் என்று புகழ்ந்து கூறி மூட்டை மூட்டையாகத் தங்க நாணயங்களைப் பரிசாகப் பெற்றுச் சென்றனர். இது மந்திரி மாணிக்கவர்மனுக்குப் பிடிக்கவில்லை.

ஒருமுறை அயல் நாட்டிலிருந்து வந்த ஒரு சோதிடர் மன்னனைக் கண்டு "ஆகா! உங்கள் வலது கையில் மணிக்கட்டின் மீதுள்ள மிளகின் அளவிலுள்ள மச்சம்தான் உங்கள் அதிர்ஷ்டத்திற்குக் காரணம். அதனால்தான் நீங்கள் மன்னனாக இருக்கிறீர்கள். இந்த மச்சமே ஒரு புளியங்கொட்டை அளவில் இருந்திருந்தால் நீங்கள் இந்த உலகின் சக்கரவர்த்தியாக ஆகி இருப்பீர்கள்" என்றார்.

அப்போது அருகே இருந்த மாணிக்கவர்மனுக்கு இது எரிச்சல் மூட்டியது. உடனே அவன் சற்று தூரத்தில் நின்று காவல் புரியும் ஒரு வீரனை அழைத்து "நீ உன் வலது கை மணிக்கட்டைக் காட்டு" என்றான். அந்த வீரனும் தன் வலது கை மணிக்கட்டைக் காட்டினான். அதன்மீது புளியங்கொட்டை அளவில் மச்சம் இருப்பதை மன்னனும், வந்த சோதிடரும் பார்த்தார்கள்.

சோதிடர் வாயடைத்துப் போனார். அன்று முதல் மன்னனுக்கும் மச்சத்தின் மீது வைத்திருந்த மூட நம்பிக்கை போயிற்று.






நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:

# மயில்

நம் நாட்டுப் பறவைகளிலேயே மிக அழகானது மயில். மிகப் பெரிதாக விளங்கும் ஆண் மயிலின் சிறப்பு அதன் நீளமான தோகை. சாதாரணமாக இந்தத் தோகையின் நீளம் 1.2 மீட்டர். தோகை விரித்து ஆடும் மயில் பார்க்க மிக அழகாக இருக்கும். தோகையில் பொன் நிறமும் நீல நிறமும் கலந்த மயில் கண்கள் பார்ப்போர் கண்களைப் பறிப்பது போலிருக்கும். மயிலின் தலையில் அழகிய கொண்டை உள்ளது.

பெண் மயிலுக்குத் தோகை கிடையாது. அதன் உடலில் நீலநிறப் புள்ளிகள் இருக்கும். கழுத்தின் அடிப் பகுதி இலைப்பச்சை, நீலநிறமாக இருக்கும். பெண் மயிலின் தலைமீதும் கொண்டை இருக்கும். இது ஒரு தடவையில் ஐந்தாறு முட்டைகளை இடும்.

மயில் தானியம், இளந்துளிர் இலைகள், புழுக்கள் ஆகியவற்றைத் தின்னும். சில சமயங்களில் பாம்புகளையும் பிடித்துச் சாப்பிடும்.

நம் புராணங்களில் மயில் முருகக் கடவுளின் வாகனமாகக் கூறப்பட்டுள்ளது. அழகாயும் பார்ப்போர் மனதைக் கவரும் மயில்தான் நம் தேசியப் பறவை.

செய்திகளில் சிறுவர் சிறுமியர்

# நற்பணிக்காக ஸ்கேடிங்

பம்பாயிலிருந்து டில்லி வரை 1600 கி. மீ. தூரம் 'ரோலர்-ஸ்கேடிங்' செய்து எல்லோர் கவனத்தையும் கவர்ந்தாள் பரோடாவைச் சேர்ந்த ஒரு சிறுமி. இப்படித் துணிகர அற்புதச் செயலை அவள் புரிந்தது தன் பெயர் 'கின்னஸ்' புத்தகத்தில் வரவேண்டும் என்பதற்காக அல்ல. குஜராத் மாநிலத்தில் நவ்சாரியிலுள்ள ஆப்தல்பால்ஜி கல்லூரிக்கு நிதி திரட்டித் தரவே அவள் இந்த ஸ்கேட்டிங்கைச் செய்தாள். அவள் அந்தக் கல்லூரி மாணவியும் கூட அல்ல. எட்டே வயதான சீதல் பாண்டயா பரோடாவில் ஒரு பள்ளியில் மூன்றாம் வகுப்பு மாணவியே.

சென்ற கோடையின் போது சீதல் தன் தந்தை ஜகதீஷ் பாண்டயாவும் மற்றும் இருவரும் கூட வர பரோடாவிலிருந்து கிளம்பினாள். இவர்களுக்கு உதவ மற்றும் இருவர் காரில் மே முதல் தேதி அவர்களோடு சென்றார்கள். இந்த ஸ்கேட்டிங்கை பிரபல திரைப்பட நடிகர் சுனில் தத் துவக்கி வைத்தார். மகாராஷ்டிரம், குஜராத், ராஜஸ்தான், ஹரியானா ஆகிய மாநிலங்களின் பல நகரங்கள் வழியே சென்று ஜூன் 22ந் தேதி இவள் டில்லியை அடைந்தாள். வழியில் இரண்டு லட்சம் ரூபாய் . நன்கொடையாக வசூலாயிற்று. பம்பாய் நகரப் பிரபல ஹோட்டல் ஒன்று ரூ. 50,000 அளித்தது. பிரபல பாட்டரி தயாரிக்கும் நிறுவனம் இந்தப் பயணத்திற்குத் திட்டம் வகுத்தது.

சீதல் இப்படி ஸ்கேட்டிங் செய்வது இது முதல் தடவை அல்ல. இவள் தன் ஐந்தாவது வயதிலேயே டில்லியிலிருந்து பம்பாய்க்கு ஸ்கேடிங் செய்தாள். அப்போது வசூலான தொகையைப் புற்று நோய் நிவாரணத்திற்கு நன்கொடையாக அளித்தாள். இதற்கு ஒரு வாரத்திற்குப்பின் அகமதாபாத்திலிருந்து பம்பாய்க்கு 60 கி. மீ ஸ்கேடிங் செய்தாள். பின்னர் கல்கத்தாவிலிருந்து கான்பூர் வழியில் 100 கி. மீ ஸ்கேடிங் செய்தாள். இதற்காக அன்னை தெரசா இவளைப் பாராட்டினார்.

சீதலின் இந்தத் துணிகரச் செயலுக்கு அவளது தந்தை ஜகதீஷ் பாண்டயாவே காரணம். அவர் தன் மகளை அவளது மூன்றாவது வயதிலிருந்தே விளையாட்டுகளில் பயிற்சி பெற ஊக்கம் அளித்தார். இதற்கு ஓராண்டிற்குப்பின் அவர் தம் மகளை மாராதான் ஸ்கேடிங்கில் கலந்து கொள்ளச் செய்தார். இப்போது சீதல் தினமும் 60 கி. மீ ஸ்கேடிங் பயிற்சி செய்கிறாள்.

தன் திறமையை வெளிநாட்டவரும் பாராட்ட வேண்டும் என சீதல் விரும்புகிறாள். விரைவிலேயே அவள் அகில உலக நிலையில் பேரும் புகழும் பெறவேண்டும் என நாமும் விரும்புகிறோம்.



# உங்களுக்கு தெரியுமா?

1. எலிபெண்டா குகைகள் எங்கு உள்ளன?
2. எவரெஸ்ட் சிகரத்தில் முதன் முதலாக ஏறியவர்கள் யார்? எப்போது?
3. 15ஆவது நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு மகானை ஹிந்துக்களும் முகம்மதியர்களும் அவர் தம்மைச் சேர்ந்தவர் என்றே கூறுகிறார்கள். அந்த மகான் யார்?
4. கி.பி. முதலாவது நூற்றாண்டில் ஒரு மதப் பிரசாரகர் நம் நாட்டிற்கு வந்து பலரைக் கிருஸ்துவர்களாக்கி இங்கேயே உயிர் துறந்தார். அவர் யார்?
5. இந்தியாவின் முதல் பெண் டாக்டர் யார்?
6. நம் நாட்டின் சுப்ரீம் கோர்ட்டின் முதலாவது பெண் நீதிபதியானவர் யார்?
7. நம் நாட்டில் முதன் முதலாக 'இண்டியன் ஏர்லைன்' விமானத்தை ஓட்டியவர் யார்?
8. பாரத விமானப் படை எப்போது அமைக்கப்பட்டது?
9. நம் நாட்டின் முதலாவது விமானப் படைத் தளபதி யார்?
10. நம் நாட்டின் கப்பல் கட்டும் மிகப் பழைய நிறுவனம் எது? யார் நிறுவினார்?
11. நம் நாட்டில் 'சில்ரன்ஸ் பிலிம் சொஸைடி' எப்போது நிறுவப்பட்டது?
12. நம் நாட்டில் கால்நடைகள் மிக அதிகமுள்ள மாநிலம் எது?
13. புலியை நம் தேசிய மிருகமாக எப்போது அறிவித்தார்கள்?
14. நம் நாட்டில் முதலாவது தபால் தலை எப்போது வெளியிடப்பட்டது?
15. சீக்கியர்களின் மிகப் புனிதமான தலம் எது?

## விடைகள்

1. பம்பாய் அருகே உள்ள எலிபெண்டா தீவில்.
2. 1953ல். டென்சிங் நார்கே, எட்மண்ட் ஹிலேரி.
3. கபீர்.
4. ஏசுவின் பனிரெண்டு சீடர்களில் ஒருவரான செண்ட் தாமஸ். கி.பி 52ல் கேரளம் வந்து 16 ஆண்டுகளுக்குப்பின் சென்னை 'லிட்டில் மவுண்ட்'டிலுள்ள மாதா கோவிலில் கொல்லப்பட்டார்.
5. டாக்டர் ஆனந்தாபாய் ஜோஷி. அமெரிக்காவில் எம்.டி பட்டம் பெற்று மகாராஷ்டிர மாநிலத்தில் தொழில் புரிந்து 1887 பிப்ரவரியில் இறந்தார்.
6. கேரள நீதிபதியான பாத்திமா பீவி.
7. ஜே.ஆர்.டி. டாடா.
8. 1932 அக்டோபர் 8ந் தேதி.
9. சுப்ரதோ முகர்ஜி.
10. விசாகப்பட்டின 'ஹிந்துஸ்தான் ஷிப் யார்ட்'. பம்பாய் சிந்தியா ஸ்டீம் நேவிகேஷன் நிறுவனம்.
11. 1955ல்.
12. உத்திரப் பிரதேசம்.
13. 1972ல்.
14. 1852ல்.
15. அமிர்தசரசில் உள்ள பொற்கோவில்.

# வானர சிவபக்தர்

டில்லியிலுள்ள ஒரு சிவன் கோவிலுக்குள் உள்ள ஒரு மரத்தின் மீது ஒரு குரங்கு வசித்து வந்தது. அது தினமும் அதிகாலை நான்கு மணிக்கு எழுந்து கீழே இறங்கி வந்து கர்ப்பக்கிரகத்தின் முன் பயபக்தியுடன் நின்று கைகூப்பி வணங்கி சற்று நேரத்திற்குப் பின் மீண்டும் மரத்தின் மீது ஏறிவிடுமாம். இதைக் கண்டு அக் கோவிலுக்கு வந்தவர்கள் எல்லாம் அக் குரங்கிற்கு மரியாதை செலுத்தினார்கள். இப்படியே பத்து வருடங்கள் நடந்த பின் அந்தக் குரங்கு அண்மையில் ஒருநாள் இறந்து விட்டது. மக்கள் அதன் பூத உடலை கங்கை நீரால் குளிப்பாட்டி அதனைத் தெருக்கள் வழியே எடுத்துச் சென்று யமுனை நதிக்கரையில் ஈமச் சடங்குகளைச் செய்தனர். இதில் இருபத்தைந்தாயிரம் மக்கள் கலந்து கொண்டார்களாம்.



## அம்புலிமாமா செய்திகள்

# காக்கை தின்போர்



ஜப்பானில் கிசாகிடா கடற்கரை ஓர ஊர்காரர்களுக்கு விவசாயம்தான் தொழில். அவர்களது பயிர்களைக் காக்கைகள் நாசம் செய்யவே அவர்கள் ஒவ்வொருவருக்கும் 7500 டாலர்களுக்கு மேல் வருடத்தில் நஷ்டம் ஏற்படலாயிற்று. அதனால் அவர்கள் காக்கைகள் மீது ஆத்திரம் கொண்டு அவற்றைக் கொன்று பழி வாங்க அவற்றைச் சாப்பிடலாயினர். இதனால் மாதத்திற்கு இருநூறு காக்கைகள் வீதம் கடந்த மூன்று ஆண்டுகளாகக் கொல்லப்பட்டு அவர்களால் தின்னப்பட்டு வருகிறதாம்.



# விரட்டிவிட்டாயே!

ரங்கைய்யனுக்கு அந்த ஊரில் ஒரு நல்ல வேலை கிடைத்துவிட்டது என்றாலும் வசிக்க ஒரு வீடு தான் கிடைக்கவில்லை. அவன் எவ்வளவோ பேர்களிடம் விசாரித்துப் பார்த்தான். பலன் எதுவும் இல்லை. அந்த நிலையில் சோமநாதன் என்பவன் அவனைக் கண்டு "நீ வீடு தேடிக் கொண்டிருக்கிறாயாமே. இந்த ஊர் எல்லையில் எனக்குச் சொந்தமான வீடு ஒன்று இருக்கிறது. அதற்குக் குடிவர எல்லோரும் பயப்படுகிறார்கள். ஏனெனில் அதற்குப் பேய் பிசாசுகள் வசிக்கும் வீடு என்று பெயர் வந்துவிட்டது. நீ வேண்டுமானால் அதில் போய் இரு. எனக்கு வாடகை கூட வேண்டாம்" என்றான்.

அதைக் கேட்ட ரங்கைய்யன் மிகவும் சந்தோஷப்பட்டு அன்றிரவே அந்த வீட்டிற்குப் போனான். வீடு பூட்டப்பட்டிருந்தது. அவன் அங்கே வாசல்படியில் கால் வைத்ததும் பூட்டு தானாகவே திறந்து கொள்ள கதவும் தானே திறந்தது. அவன் அது கண்டு பயந்து விடாமல் வீட்டினுள் சென்றான். அப்போது வாசல் கதவு தானே மூடிக் கொண்டது.

உள்ளே திடீரென வெளிச்சம் ஏற்பட்டதை அவன் பார்த்தான். மறு விநாடி அங்கு ஒரு உருவம் தோன்றி "நான் இந்த வீட்டிலுள்ள பெரிய பிசாசு. என்னுடன் மூன்று பிசாசுகள் இங்கு உள்ளன. இங்கே நீ இருக்க வேண்டும் என்றால் நான் சொல்கிறபடி நீ நடக்க வேண்டும்" என்றது. ரங்கைய்யனும் அதனை வணங்கி "நீ சொல்கிறபடியே நடக்கிறேன் நான் இங்கேதான் இருந்தாக வேண்டும். ஏனென்றால் இந்த ஊரில் உத்தி

—ரம்யா குருமூர்த்தி—



யோகம் பார்க்கும் எனக்குக் குடி இருக்க ஒரு வீடே கிடைக்க வில்லையே'' என்றான்.

அப்போது அந்தப் பிசாசு மற்ற மூன்று பிசாசுகளையும் கூப் பிட்டு ரங்கைய்யனுக்குக் காட்டி ''இது என் மனைவி. மற்ற இரண் டும் என் பெண்கள். இந்த இருவ ரின் யார் அழகானவள் என்பது தீராத பிரச்னையாக உள்ளது. இதைப்பற்றி எப்போதும் அவர்கள் வாக்குவாதம் செய்து கொண்டே இருக்கிறார்கள். என்னாலோ என் மனைவியாலேயே இதற்கு ஒரு தீர்வுகான முடியவில்லை. எனவே நீ இதைத் தீர்த்து வை'' என்றது.

ரங்கைய்யன் அந்த இரு பிசாசு களையும் ஏற இறங்கப் பார்த் தான். அவை அவனைப் பார்த்து பயங்கரமாய்ச் சிரித்தன. ரங்கைய் யன் சற்றும் பயப்படாமல் ''நான் உண்மையைச் சொன்னால் உங்க ளில் யாராவது ஒருத்திக்குக் கோபம் வரத்தான் வரும். சற்று நேரமான தும் அந்த கோபம் போய்விடும். நான் இதற்கு ஒரு தீர்வு சொன்ன தும் நீங்கள் ஆத்திரப்படாமலும் என்னை ஒன்றும் செய்யாமலும் இருக்க வேண்டும். இதற்குச் சம்மத மானால் நான் சொல்கிறேன்'' என்றான்.

எல்லாப் பிசாசுகளும் சம்மதம் என்றன. எனவே அவன் இரு பிசாசு களில் ஒன்றைச் சுட்டிக்காட்டி ''இவள்தான் மற்றவளைவிட அழ கானவள். ஆனால் இவ்வளவு அழ குடன் இருக்கும் இவள் மற்ற பிசாசு களுடன் ஏன் இங்கே இருக்க வேண்டும்? இந்த வீட்டைவிட்டு வெளியே போனால் எவ்வளவோ ஆண் பிசாசுகள் இதை மணந்து கொள்ளப் போட்டி போட்டுக் கொண்டு முன்வருமே'' என்றான்.

அப்போது அந்த இளம் பிசாசு தன் தாய் தந்தையரிடம் ''இவன் கூறுவது சரியே. நான் இங்கிருந்து வெளியே போனால்தான் ஆண் இளம் பிசாசுகள் என்னைப் பார்ப் பார்கள். அப்போதுதான் நான் அவற்றில் ஒன்றை மணக்க முடி யும். அதனால் நான் இங்கிருந்து போகிறேன்'' எனக்கூறி உடனே

போய்விட்டது. ஆனால் மற்ற இளம் பிசாசோ ரங்கையன் மீது கோபம் கொண்டு ஒரு மூலையில் போய் நின்றது. ரங்கையன் அதனருகே போய் "உண்மையில் நீதான் அழகானவள். இதைச் சொன்னால் நீ இந்த வீட்டைவிட்டுப் போய்விடுவாய் என்ற காரணத்தால்தான் சொல்லவில்லை. உன்னை நான் தினமும் பார்த்துக்கொண்டே இருக்க ஆசைப்பட்டதால் அப்படிச் சொன்னேன்" என்றான்.

அது கேட்டு அந்த இளம் பெண் பிசாசு கோபம் தணிந்து "சரி, என் அக்கா திரும்பி இங்கே வந்து விடுவாளோ?" என்று கேட்கவே அவனும் "அவள் திரும்பி வந்தால் அவளை யாருமே மணக்க விரும்பவில்லை என்றுதானாகும். அப்போது அழகில்லாதவள் என்றாகிவிடும். அதனால் அவள் இங்கே வரவே மாட்டாள்" என்றான்.

அப்போது அந்தப் பிசாசு "நீ உண்மைதான் கூறுகிறாயா அல்லது என் கோபத்தைத் தணிக்க இப்படிச் சொல்கிறாயா?" என்று கேட்டது. ரங்கையனும் "ஒருவேளை நான் பொய் சொன்னாலும் அது உன்னைச் சந்தோஷப்படுத்தத்தானே. நான் எப்போதும் அழகானவர்களைத்தான் புகழ்வேன். தெரிந்ததா?" என்றான் சற்று கடுகடுப்போடு.

அப்போது அந்தப் பிசாசு "அப்



படியானால் நீ என்னைக் கல்யாணம் செய்து கொள்" என்றது. ரங்கையனோ "அது எப்படி? நீயோ பிசாசு. நானோ மனிதன் எங்கேயாவது ஒரு மனிதனுக்கும் ஒரு பிசாசுக்கும் கல்யாணம் நடக்குமா? ஒரு பிசாசு மற்றொரு பிசாசைத்தான் மணக்கும், ஒரு மனிதனோ ஒரு பெண்ணைத்தான் மணப்பான்" என்றான். அப்போது பிசாசு "நான் பெண்ணாக மாறி விடுகிறேன்" என்றது.

இதே சமயம் பெரிய பிசாசு அவர்களருகே வந்து "இவள் கோபம் தணிந்ததா?" என்று கேட்டது. அப்போது இளம் பிசாசு தான் ரங்கையனையே மணந்து கொள்ளப் போவதாகக் கூறவே



பெரிய பிசாசும் அதன் மனைவியும் மகிழ்ந்து போயின.

அப்போது ரங்கைய்யன் "அது சரி. எனக்கு உங்கள் பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுப்பதானால் வரதட்சிணை கொடுக்க வேண்டுமே!" என்றான். பெரிய பிசாசும் "சரி, உனக்கு என்ன வேண்டுமோ கேள்" என்றது.

ரங்கைய்யனும் "எனக்கு இந்த வீட்டைக் கொடுக்க வேண்டும். இதில் நானும் என் மனைவியும் மட்டுமே இருப்போம். நீங்கள் இருவரும் இங்கிருந்து போய்விட வேண்டும்" என்றான்.

அதைக் கேட்ட பெரிய பிசாசு "இது அநியாயம். நாங்கள் இங்கே இருந்தால் உனக்கு என்ன இடைஞ்சல்?" என்று கேட்டது. ரங்கைய்யனும் "நீங்கள் இங்கே இருந்தால் உங்கள் தயவில் நான் வாழ்வதாக எல்லோரும் சொல்வார்கள். நீங்கள் இங்கே இருந்தால்தான் வாழ முடியுமா? வேறு எங்கேயும் போய் வாழ முடியாதா?" என்று கேட்டான்.

பெரிய பிசாசும் "ஏன் முடியாது? நீ சொல்வதே சரி. நாங்கள் போய் விடுகிறோம்" என்று கூறியது. பிறகு அவை தம் மகளுக்கு அறிவுரைகள் கூறிவிட்டு அங்கிருந்து போய்விட்டன. அவை போனதும் ரங்கைய்யன் இளம் பிசாசிடம் "உன் தாய் தந்தையரையும் உன் அக்காவையும் இந்த வீட்டை விட்டு வெளியேற்றியது எனக்கு மிகவும் வருத்தமாக உள்ளது" என்றான்.

இளம் பிசாசும் "நீ செய்தது சரியே. நானும் என் அக்காவும் உயிரோடு இருக்கையில் என் தாய் தந்தையர் எங்களுக்கு திருமணத்திற்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்கள். அப்போது இந்த வீட்டின் சொந்தக்காரனான சோமநாதன் என் தந்தையின் வயல்களை அபகரித்துக் கொண்டு விட்டான். என் தந்தையிடம் பணம் இல்லை. அதனால் எங்கள் திருமணங்கள் நடக்கவில்லை. நாங்களெல்லாம் அவமானம் தாங்க முடியாமல் தற்கொலை செய்து கொண்டு

பிசாசுகளாகத் திரிகிறோம். அந்த சோமநாதனைப் பழிவாங்கவே அவன் கட்டிய இந்த புதிய வீட்டிற்குள் நாங்கள் புகுந்து இருக்கலானோம். என் அக்கா கல்யாணம் செய்து கொண்டு விட்டாள். நானும் கல்யாணம் செய்து கொண்டு விடுவேன். என் தாய் தந்தையர் விருப்பமும் நிறைவேறி விட்டது. இனி எந்த ஆசையும் எனக்கு இல்லை'' என்றாள்.

அப்போது ரங்கைய்யன் ''அப்படியானால் நீ இன்னமும் ஏன் பிசாசாக இருக்க வேண்டும்?'' என்று கேட்டான். மறுநிமிடமே அந்தப் பிசாசு மறைந்தது. அதன் ஆவி சொர்க்கலோகத்திற்குப் போய் விட்டது.

ரங்கைய்யன் அன்றிரவு முழுவதும் அந்த வீட்டில் படுத்துத் தூங்கினான். மறுநாள் காலை அவன் சோமநாதனைக் கண்டு நடந்ததை எல்லாம் கூறினான். சோமநாதனும் ''பேஷ். நீ கெட்டிக்காரன். பிசாசுகளை எல்லாம் ஒரே இரவில் விரட்டி விட்டாயே. உனக்கு என் மகளைக் கல்யாணம் செய்து வைத்து அந்த வீட்டையும் உனக்குக் கொடுக்கிறேன். ஆனால் எங்களுக்கு இருப்பது அந்த ஒரு மகள்தான். அதனால் நீ எங்களையும் உன்கூட அந்த வீட்டில் வைத்துக் கொள்ள வேண்டும்'' என்றான்.

சோமநாதனின் பெண் உலகம்மா மிகவும் அழகானவள். ரங்கைய்யன் அவளை மணக்க சம்மதித்தான். ஆனால் தன் கொள்கை மாமனார் தயவில் வாழக்கூடாது என்றும் தானே உழைத்துச் சம்பாதித்துத் தன் மனைவியுடன் வாழ வேண்டும் என்பதையும் அவன் கண்டிப்பாகக் கூறிவிட்டான்.

சோமநாதனும் அதற்கு இணங்கித் தன் மகளை ரங்கைய்யனுக்கு மணம் செய்து வைத்து அத்தம்பதிகளை அந்த வீட்டில் குடித்தனம் செய்ய விட்டு விட்டு வந்தான்.





# இரட்டைச் செலவு

வெகு காலத்திற்கு முன் மந்தை யூரில் சந்தானம் என்ற பணக்கா ரன் இருந்தான் அவன் மகாக் கஞ் சன். ஒருமுறை அவன் வெளியூர் போய்விட்டு வரும்போது பேரீச்ச மரம் ஒன்றைப் பார்த்தான். அதில் பேரீச்சம் பழங்கள் கொத்துக் கொத்தாய்த் தொங்கின. அவற்றைப் பறித்துத் தின்ன அவன் ஆசைப் பட்டான். அவனுக்கு மரம் ஏறத் தெரியாது. ஆனாலும் எப்படியோ சிரமப்பட்டு மரத்தின் உச்சியை அடைந்து விட்டான்.

பேரீச்சம் பழங்களைச் சாப் பிட்டு விட்டு கீழே இறங்க அவன் பார்த்தான். அவன் தலை சுழன் றது. தரை வெகு ஆழத்தில் உள் ளது போல தோன்றியது. அவன் தன் குலதெய்வத்தை நினைத்து "ஏழுமலையானே! நான் உயி ருடன் கீழே இறங்கினால் நூறு பிராமணர்களை அழைத்து சாப் பாடு போடுகிறேன்" என்றான். பிறகு அவன் மரத்திலிருந்து இறங்க லானான்.

பத்தடி இறங்கியதும் அவன் மனம் அவ்வளவாக ஆபத்து இல்லை என்று உணர்ந்தது.

அதற்குப் பிறகு அவன் கஷ்டம் இல்லாமல் இறங்கித் தரை மீது கால் வைத்தான். அப்போது அவன் தன் மனதில் "இவ்வளவு சுலபமாக முடிந்ததற்கு நூறு பிராம ணர்களுக்கா சாப்பாடு! ஒரு நல்ல பிராமணனுக்குச் சாப்பாடு போட்டாலே போதும். அது நூறு பிராமணர்களுக்குப் போட்டதற் குச் சமம்" என்று நினைத்துக் கொண்டான்.

அவன் பெருமாள் கோவிலுக்குப் போய் கிருஷ்ணமாச்சாரியைக் கண்டு "சுவாமி, நாளை நீங்கள்

—காரை. குருமூர்த்தி—

என் வீட்டிற்கு வந்து சாப்பிட வேண்டும்'' என வேண்டினான்.

கிருஷ்ணமாச்சாரியால் அதை நம்பமுடியவில்லை. மகாக் கஞ்ச னான சந்தானமா சாப்பிடக் கூப் பிடுகிறான்! இதில் ஏதோ மர்மம் இருக்கிறது என அவர் நினைத்து மறுநாள் சாப்பிட அவன் வீட்டிற்கு வருவதாக ஒப்புக் கொண்டார்.

சந்தானமும் தன் வீட்டிற்குப் போய் தன் மனைவியிடம் தான் கிருஷ்ணமாச்சாரியை மறுநாள் சாப்பிட அழைத்திருப்பதாயும் அதற்கான காரணத்தையும் கூறி "நான் இன்று போன வேலை முடியவில்லை. நாளை காலை யில் போய்விட்டு மாலையில்தான் திரும்புவேன். சாதாரண சாப்பா டோடு ஒரு பாயசம் மட்டும் வைத் துப் போடு'' என்று எச்சரித்தான்.

மறுநாள் காலை சந்தானம் தன் வேலையை கவனிக்கக் கிளம் பிப் போய்விட்டான். சாப்பாட்டு வேளைக்கு கிருஷ்ணமாச்சாரி சந்தானத்தின் வீட்டிற்கு வந்தார். சந்தானத்தின் மனைவியும் அவரை வரவேற்று "அவர் அவசர வேலை யாக வெளியூர் போயிருக்கிறார். நீங்கள் வந்தால் சாப்பாடு போடச் சொன்னார்'' என்றாள். கிருஷ்ண மாச்சாரியும் கைகாள் அலம்பிக் கொண்டு வந்து சாப்பிட உட்கார்ந் தார். அவர் ஒல்லியாக இருந்தா லும் நன்றாகச் சாப்பிடுபவர்.



அதனால் சந்தானத்தின் மனைவி சமைத்து வைத்திருந்ததில் முக்கால் வாசி சாப்பிட்டுவிட்டு எழுந் தார்.

அவருக்கு அவள் ஒரு தட்டில் வெற்றிலை, பாக்கை வைத்துக் கொடுத்தாள். அதை பார்த்த கிருஷ்ணமாச்சாரி "என்னம்மா இது! தட்சணை இல்லாத பிராம் மண போஜனம் பலன் கொடுக் காது. அதனால் இரண்டு ரூபா யாவது கொடு'' என்றார். அவளும் இரண்டு ரூபாய் எடுத்து வந்து வெற்றிலைபாக்கில் வைத்துக் கொடுக்க அவரும் அதை வாங்கிக் கொண்டு தன் வீட்டிற்குப் போய் விட்டார்.

மாலையில் வீடு திரும்பிய

சந்தானம் சாப்பிட கிருஷ்ணமாச்சாரி வந்தாரா எனக் கேட்க அவர் மனைவியும் "ஆகா! வந்தார். பகாசுரன் மாதிரி சாப்பிட்டார்! இரண்டு ரூபாய் தட்சணை கேட்டு வாங்கிக் கொண்டும் போனார்" என்றாள்.

அது கேட்டு சந்தானம் தலையில் அடித்துக் கொண்டு "அவனுக்கு சாப்பாடு போட்டதே தண்டம். தட்சிணை வேறா? பயல் உன்னை ஏமாற்றிவிட்டான். விட்டேனா பார் அவனை" என்று கூறி ஒரு தடியை எடுத்துக் கொண்டு ஓடினான்.

இந்த மாதிரி ஏதாவது நடக்கும் என எதிர்பார்த்த கிருஷ்ணமாச்சாரி சந்தானம் ஓடிவருவதைக் கண்டதும் தன் வீட்டு நடை வழியில் படுத்துப் புரண்டு முனகினார். அவரது மகனும் மனைவியும் அழுதுபுலம்பிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் சந்தானத்தைக் கண்டதும் "பாவி! சாப்பாடு போடுவதாகச் சொல்லி இவருக்கு விஷத்தைக் கொடுத்து விட்டாயா! இப்போதுதான் வைத்தியர் வந்து பார்த்துவிட்டு மருந்து கொடுத்துப் போனார். நீ செய்ததை ஊர்ப் பஞ்சாயத்து கூட்டி முறையிடுகிறோம்" என்றார்கள்.

சந்தானம் பயந்துவிட்டான். பஞ்சாயத்து என்றால் அபராதம் போடுவார்களே எனப் பயந்து அவன் "என்னமோ எப்படியோ இது தெரியாமல் நடந்துவிட்டது. நான் வைத்தியச் செலவைக் கொடுத்துவிடுகிறேன். எவ்வளவு என்று சொல்லுங்கள். ஆனால் பஞ்சாயத்து வரை போக வேண்டாம்" என்று கெஞ்சினான்.

கிருஷ்ணமாச்சாரியின் மகனும் "வைத்தியச் செலவு இருபது ரூபாய்" எனவே சந்தானம் மறு பேச்சு பேசாமல் இருபது ரூபாயை எடுத்துக் கொடுத்து விட்டுத் தலையைத் தொங்கப்போட்டுக் கொண்டு சென்றான்.






அனுமார் விபீஷணனைப் பற்றிக் கூறிய கருத்துக்களைத் கேட்டுவிட்டு இராமர் எல்லோரும் கேட்கும் வித மாய் "நம்மிடம் சரண் அடைவ தாகக் கூறிவருபவனைக் கைவிடு வது அதர்மம்" என்றார். அப் போது சுக்கிரீவன் "இவன் நல்லவ னாகவே வந்தாலும் கூட இவனுக் கும் நமக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லையே" என்றான். ஆபத்தில் அகப்பட்ட அண்ணனை விட்டு வந்த இவன் நம்மையும் நட்டாற் றில் விட்டுப் போக மாட்டான் என்பது என்ன நிச்சயம் என்றும் அவன் கேட்டான்.

இராமரும் "இவன் தன் அண் ணனின் செய்கையைக் கண்டித்து விட்டு வந்திருக்கிறான். எப்போ துமே பங்காளிகள் விரோதம் பாராட்டத்தான் செய்வார்கள். இராவணனால் தனக்கு ஏதாவது கெடுதல் ஏற்படுமோ எனப் பயந்தே இவன் நம்மிடம் வந்திருக் கிறான்" என்றார்.

அதைக் கேட்ட இலட்சுமணன் "நம்மைக் கொல்ல இவனை இராவணன் அனுப்பியும் இருக்க லாம் அல்லவா? எனவே நம் மோடு இவனைச் சேர்ந்துக் கொள்ளக் கூடாது" என்றான். ஆனால் இராமரோ "நம்மிடம் சரண் புக வந்தவன் யாராக இருந் தாலும் அவனை ஏற்பதுதான் தர் மம். இராவணனே இந்த வேடத் தில் வந்து நம்மிடம் சரண் அடைவ தாகக் கூறினாலும் அவனை ஏற்பது

— சுகனின் தூது —

தான் முறை'' என்றார்.

பின்னர் அவர் சுக்கிரீவனிடம் ''நீ போய் விபீஷணனை இங்கு அழைத்து வா'' என்று கூறவே சுக்கிரீவன் விபீஷணனையும் அவனோடு வந்த நால்வரையும் அழைத்து வந்தான். அவர்களும் இராமரின் கால்களில் விழுந்து வணங்கி ''நான் இராவணனின் தம்பி விபீஷணன். என்னை அவன் அவமதித்து விட்டான். எனவே அவனை விட்டுப் பிரிந்து வந்து தங்களிடம் அடைக்கலம் புக வந்திருக்கிறேன். இனி எனக்கு நீங்கள்தாம் கதி'' என்றான்.

இராமரும் அவனுக்கு ஆறுதல் கூறி அடைக்கலம் அளிப்பதாக வாக்களித்தார். பிறகு அவர் ''இராவணனின் படைபலம் எவ்வளவு? அவனது சக்தி என்ன?'' என்று கேட்டார்.

விபீஷணனும் ''பிரம்மாவிடம் இராவணன் வரம் பெற்றபடி அவனை எந்த தேவனாலும், அசுரனாலும், கந்தர்வனாலும், நாகனாலும் கொல்ல முடியாது. அவனது தம்பியும் என் அண்ணனுமான கும்பகர்ணனும் மகா பலசாலியே. இராவணனின் மகன் இந்திரஜித் மாயப் போர் புரிபவன். அவன் தேவேந்திரனையே வென்றவன். இராவணனின் சேனாதிபதிகளும் மிகுந்த பலம் படைத்தவர்களே. தாங்கள் விரும்பும் உருவை அடையும் சக்தி பெற்ற பல ராட்சஸர்கள் இலங்கையில் இருக்கிறார்கள். இவர்களின் உதவியால்தான் இராவணன் ஈரேழு புவனங்களையும்



வென்றான்'' என்றான்.

இராமர் அதைக் கேட்டுவிட்டு ''எவ்வளவு பலம் பொருந்தியவனாக இருந்தாலும் நான் அவனைக் கொன்று உன்னை இலங்கையின் மன்னனாக்குகிறேன். இது நான் உனக்கு அளிக்கும் வாக்குறுதி. இராவணனும் அவனோடு சேர்ந்தவர்களும் போரில் மடிந்த பிறகே நான் அயோத்திக்குச் செல்வேன்'' என்றார்.

விபீஷணன் இராமரை வணங்கி ''நானும் தங்களுடன் சேர்ந்து இராவணனை எதிர்த்து ராட்சஸர்களை அழிப்பேன். தங்களுக்கு எல்லா விதத்திலும் உதவியாக இருப்பேன்'' என்றான். அப்போது இராமர் ''இலட்சுமணா! நீ போய் கடல் நீரைக் கொண்டு வா. இப்போதே விபீஷணனுக்கு அபிஷேகம் செய்து பட்டம் கட்டுவதாக அறிவிப்போம்'' என்றார்.

இலட்சுமணனும் சமுத்திர ஜலத்தைக் கொண்டு வரவே, வானரர்களின் பலத்த கரகோஷத்தினிடையே இராமர் விபீஷணனுக்கு ராஜ்யாபிஷேகம் செய்தார். இதன் பிறகு சுக்கிரீவனும் அனுமாரும் விபீஷணனும் தனியாக நின்று பேசலானார்கள்.

அப்போது சுக்கிரீவன் விபீஷணனிடம் ''நம் வானரப் படைகள் இந்தக் கடலை கடக்க என்ன வழி?'' என்று கேட்டான். விபீஷணனும் ''இராமர் சமுத்திரராஜனை வேண்டிக் கொள்ள வேண்டும். இவரது முன்னோரான சகரர் சமுத்திரராஜனுக்கு மாபெரும் உதவி புரிந்திருக்





கிறார். அதனால் கண்டிப்பாக சமுத்திரராஜன் இராமருக்கு உதவுவான்'' என்றான்.

சுக்கிரீவனும் இராமரிடம் போய் விபீஷணன் கூறியதைச் சொல்லவே, அவரும் ''பேஷ்! சரியான யோசனை. அவ்வாறே செய்யலாம்'' என்றார். பிறகு அவர் கடற்கரை ஓரத்தில் தர்ப்பைப் புல்லை விரித்து அதில் படுத்துக் கொண்டார்.

இதே சமயத்தில் இராவணனின் ஒற்றனான சார்த்தூலன் என்பவன் வானரசேனை இருக்கும் இடத்திற்கு வந்து வேவு பார்த்துவிட்டுத் திரும்பி இராவணனிடம் சென்று தான் பார்த்ததைக் கூறலானான்.

''வானரப் படை கடல் போலப் பெரிதாக உள்ளது. இராமரிடமும் இலட்சுமணனிடமும் நல்ல ஆயுதங்கள் உள்ளன. அவர்கள் சீதையை இங்கிருந்து விடுவித்துப் போக தயாராக இருக்கிறார்கள். இப்போது அவர்கள் கடற்கரை ஓரமாகத்தான் இருக்கிறார்கள். மேலும் விவரங்களை அறிய இன்னும் யாரையாவது அனுப்பலாம்'' என்றான்.

அதைக் கேட்ட இராவணனும் சுகன் என்ற இராட்சஸனை அழைத்து ''நீ என் தூதனாக சுக்கிரீவனிடம் போ. அவனிடம் நான் சீதையைக் கவர்ந்து வந்ததற்கும் வானர மன்னனான அவனுக்கும் என்ன சம்மந்தம் என்று கேள். இராமனுக்கு உதவாமல் கிஷ்கிந்தைக்குத் திரும்பிப் போவதே அவனுக்கு நல்லது என்று சொல். தேவர்களாலும் கந்தர்வர்களாலும் கூட நுழைய முடியாத இலங்கைக்குள் வானரப் படைகள் நுழைவது முடியவே முடியாது என்பதனை எடுத்துக் கூறு'' என்றான்.

சுகனும் இராவணன் சொன்னதை கேட்டுக் கொண்டு ஒரு பறவையின் உருவில் பறந்து சென்று வானரப் படை தங்கியுள்ள வடக்குக் கடற்கரையை அடைந்தான். அவன் சுக்கிரீவனின் தலைக்கு நேராகப் பறந்தவாறே இராவணன் சொல்லச் சொன்னதைக் கூறினான்.

இவ்வாறு அவன் கூறிக் கொண்டி



ருக்கும் போது சில வானரர்கள் உயரக் கிளம்பிப் போய் சுகனைப் பிடித்து கீழே போட்டு அடித்து மிதித்தார்கள். அப்போது அவன் இராமரைப் பார்த்து "இராமா! தூதனாக வந்த என்னை இவர்கள் அடிக்கிறார்களே. இதைத் தடுத்து நிறுத்து" என்று கத்தினான்.

இராமரும் வானரர்களிடம் அவனை ஒன்றும் செய்ய வேண்டாம் என்று கூறி விட்டு சுக்கிரீவனைப் பார்த்து "சுக்கிரீவா! நாம் இராவணனுக்கு என்ன பதில் சொல்லி அனுப்ப வேண்டும்?" என்று கேட்டார்.

அவனும் சுகனிடம் "தூதனே! நீ இராவணனிடம் அவன் என் நண்பன் அல்ல என்றும் அவன் எனக்கு எந்த உதவியும் செய்தது இல்லை என்றும் சொல். மேலும் இராவணன் என் நண்பரான இராமரின் பகைவன். எனக்கு விரோதியாக இருந்த வாலியின் நண்பன் அவன். வாலி இறந்தது போலவே இராவணனும் இறக்கப் போகிறான். விரைவிலேயே வானரப் படைகளோடு இலங்கைக்குள் புகுந்து அவனையும் அவனைச் சார்ந்தவர்களையும் ஒழிக்கப் போவதாகக் கூறு. இராமரின் பாணத்தை யாராலும் தடுத்து நிறுத்த முடியாது. இராமரும் இலட்சுமணனும் இல்லாத சமயத்தில் சீதையைக் கவர்ந்து வந்தான். அதிலிருந்தே எவ்வளவு தைரியசாலி அவன் என்பது தெரிகிறது. இராமர் கையால் தான் அவனுக்கு மரணம். இதை எல்லாம் நான் சொன்னதாக இராவணனிடம் தெரிவி" என்றான்.

அப்போது அங்கிருந்து கிளம்ப முயன்ற சுகனை அங்கதன் தடுத்து நிறுத்தி "இவனைப் பார்த்தால் தூதனாக தெரியவில்லை. இராவணன் அனுப்பிய ஒற்றன் போலத் தெரிகிறது" என்றான். உடனே சுக்கிரீவன்அவனைப் பிடித்துக் கட்டிப் போடும்படிக் கட்டளை இட்டான். அவ்வளவுதான். வானரர்கள் அவனது இறக்கையைப் பிய்த்தார்கள். கண்களை குத்தினார்கள். அவன் வலி பொறுக்காமல் அலறவே இராமர் குறுக்கிட்டு

அவனை விடுதலை செய்து அனுப்பினார்.

அதன்பிறகு இராமர் தர்ப்பைப் புல்லைப் படுக்கைபோல விரித்து அதில் சயனித்து சமுத்திரராஜனை தியானிக்கலானார். மூன்று நாட்களாகியும் சமுத்திரராஜன் அவர் முன் வரவில்லை. அதனால் கோபம் கொண்ட இராமர் இலட்சுமணனிடம் "தம்பீ! இந்த சமுத்திரராஜனுக்கு என்ன மமதை பார்த்தாயா? என் வில்லையும் அம்பையும் எடுத்து வா. இந்த சமுத்திரத்தையே வற்றடித்து அவனை கதிகலங்க வைக்கிறேன்" என்று கூறினார்.

இலட்சுமணனும் இராமரின் வில்லையும் அம்புகளையும் கொண்டு வந்து கொடுத்தான். இராமர் வில்லில் ஒரு அம்பை வைத்து எய்தார். அது வஜ்ஜிராயுதம் போலச் சமுத்திரத்துள் சென்றது. சமுத்திரத்தில் அலைகள் உயர எழும்பி புகைமண்டலம் சூழ்ந்தது.

இராமர் மேலும் ஒரு அம்பை எடுத்து வில்லில் வைத்தார். அவர் சமுத்திரத்தைப் பார்த்து "ஏய்! சமுத்திரராஜா! நான் இந்த அம்பை எய்தால் உன் நீர் முழுவதும் வற்றிப் போய்விடும். நீ பாலைவனமாகி விடுவாய். உனக்கு என்ன மமதை? இவ்வளவு நாட்களாக நீ ராட்சஸர்களை அண்டி இருந்ததால் இந்த மாற்றம் உன்னிடம் ஏற்பட்டு விட்டாதா?" என்று கேட்டார்.



பிறகு அவர் அந்த அம்பை எய்யத் தயாரானபோது பயங்கர ஒலி எங்கும் ஒலித்தது. பூமி அதிர்ந்தது. மலைகள் ஆடின. இருள் எங்கும் சூழ்ந்தது. காற்று வேகமாக வீசியது. உயிரினங்கள் அலறின. இதே சமயம் சமுத்திரத்திலிருந்து சமுத்திரராஜன் எழுந்து ஓடி வந்தான். அவனோடு கங்கை, யமுனை, கோதாவரி, நர்மதை, சிந்து, காவேரி போன்ற நதிகளும் வந்தன.

அவன் இராமரை வணங்கி "ஐயா! உங்களை எதிர்க்க என்னால் முடியுமா? உங்களுக்கு என்ன வேண்டுமானாலும் செய்ய நான் காத்துக் கொண்டிருக்கிறேன். உங்கள் படை இலங்கையை அடைய வேண்டுமா? அதற்கான வசதியும்

செய்து கொடுக்கிறேன்" என்றான்.

அப்போது இராமர் "நான் எடுத்த அம்பை எய்தே ஆக வேண்டும். நீ வராததால் இதனை வில்லில் வைத்தேன். இதை இப்போது எங்கே எய்யச் சொல்கிறாய்?" என்று கேட்டார். சமுத்திரராஜனும் "இதனை வடதிசையில் எய்து விடுங்கள். அங்கு அபீரர்கள் என்பவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் செய்வதெல்லாம் பாவமே. இந்த அம்பு அவர்களை ஒழித்து உலகிற்கு நல்லதைச் செய்யட்டும்" என்றான்.

இராமரும் சமுத்திரராஜன் கூறியபடியே செய்தார். அந்த அம்பு வடதிசையில் அபீரர்கள் இருந்த இடத்தில் போய் விழுந்து அவர்களை அழித்தது.

அப்போது சமுத்திரராஜன் இராமரிடம் "உங்கள் வானரப் படையில் நளன் என்பவன் இருக்கிறான். அவன் தேவலோக சிற்பியான விஸ்வகர்மாவின் மகன். அவன் சமுத்திரத்தில் அணை கட்டுவான். அது இலங்கைக்குப் போகப் பாலம் போல அமையும். அது நீரில் முழுகிப் போகாமல் இருக்கும்படி நான் பார்த்துக் கொள்கிறேன். எனவே இந்த அணை கட்டும் வேலையை உடனே ஆரம்பியுங்கள்" என்று கூறினான்.

இராமரும் நளனை அழைத்து வரச் சொன்னார். அவன் வந்ததும் அவர் சமுத்திரராஜன் கூறியதை அவனிடம் தெரிவித்தார். அவனும் "ஆம். அவர் கூறியது போல நான் தேவலோக சிற்பியான விஸ்வகர்மாவின் மகன்தான். விசுவகர்மா எனக்கு அனுக்கிரகித்து இருக்கிறார். அதனால் சமுத்திரத்தின் மீது என்னால் அணையைக் கட்ட முடியும். இதற்கு தாமதம் வேண்டாம். இப்போதே வேலையை ஆரம்பித்து விடலாம். வானரர்களின் உதவியுடன் வெகு விரைவில் அணையைக் கட்டி முடித்து விடலாம்" என்றான்.





# கேட்கவே வேண்டாம்!

மங்களகிரிக்கு அருகே மாலினி நதி ஓடிக் கொண்டிருந்தது. அந் நதிக் கரையிலிருந்து சற்று தூரத்தில் மயிலூர் என்ற கிராமம் இருந்தது. அங்கு கேசவபட்டர் என்ற மகா வித்வான் இருந்தார். அவர் மிகவும் படித்த பண்டிதர் என்றும் கவிஞர் என்றும் பெயர் பெற்றவர்.

கேசவபட்டரின் சகோதரி சியாமளா. அந்நாட்டு ஆஸ்தான பண்டிதரான ஆனந்த பட்டர் அவளது கணவர். அவரும் பண்டிதராயினும் மிகவும் கர்வம் பிடித்தவர். அவர் ஒருமுறை தன் மனைவியுடன் கேசவபட்டரின் வீட்டில் நடக்கும் ஒரு விசேஷத்திற்கு வந்தார்.

அவர் கேசவபட்டரோடு பேசிக் கொண்டிருக்கையில் "கேசவா! நீ தலைநகருக்கு வந்து விடேன். நீ என் மைத்துனன் என்று கூறினாலே போதும். மன்னர் உன்னையும் ஆஸ்தான பண்டிதராக நியமித்து விடுவார்" என்றார்.

கேசவபட்டரோ "எனக்கு அரசாங்க உத்தியோகம் பார்க்க விருப்பம் இல்லை. இங்குள்ள என் நில புலன்களில் விவசாயம் செய்து வாழவே விரும்புகிறேன்" என்றார். அதைக் கேட்ட ஆனந்தபட்டர் கோபம் கொண்டார். தான் சொன்னதைக் கேளாமல் தன் மைத்துனன் எதிர்வார்த்தை ஆடுவதா என்று எண்ணி அவர் ஆத்திரம் கொண்டார். அதனால் தன் மனைவியோடு அன்று கிளம்பிச் சென்றவர் மறுபடியும் அந்த ஊர்ப் பக்கம் எட்டிப் பார்க்கவே இல்லை. தன் மனைவி சியாமளாவையும் அவளது சகோதரனின் வீட்டிற்கு அனுப்பவில்லை.

இப்படியாக அந்த இரு குடும்

—பாபநாசம் சாமா—



பங்களுக்கிடையே தொடர்பே இல்லாமல் பதினைந்து ஆண்டுகள் கழிந்து விட்டன. கேசவபட்டரின் மகள் கோமளா பதினைந்து வயதுப் பெண்ணாகி நன்கு படித்தும் இருந்தாள்.

ஒருமுறை வேறொரு ஊரில் நடந்த கல்யாணத்திற்கு கேசவ பட்டர் போயிருந்தார். அங்கு தன் சகோதரி சியாமளாவைக் கண்டார். அவளைக் கண்டு கேசவ பட்டர் க்ஷேமம் விசாரித்து விட்டு "உன் கணவர் வரவில்லையா?" என்று கேட்டார். சியாமளாவும் "இல்லை அண்ணா! என் மகனை துணையாக அழைத்துக் கொண்டு நான் மட்டும் வந்தேன். இவன்தான் உன் மருமகன் கோபாலன்" என்று கூறித் தன்னருகே இருந்த இருபது வயது இளைஞனைக் காட்டினாள்.

கோபாலனும் பணிவுடன் தன் மாமாவை வணங்கினான். அவனது பணிவையும் பேச்சையும் கண்டு கேசவபட்டர் மகிழ்ந்து போனார். அதுபோல சியாமளாவும் தன் ண்ணனின் மகள் கோமளாவைக் கண்டு பூரித்துப் போனாள்.

அவள் கேசவபட்டரிடம் "அண்ணா! உன் மகளை என் மருமகளாக்கிக் கொள்ள விரும்புகிறேன். இவ்வளவு நாட்களாகத் தான் ஒருவரை மற்றவர் பாராமலே இருந்து விட்டோம். இந்த சம்பந்தத்தினாலாவது நம் குடும்பங்களிடையே முன்போல தொடர்பு இருக்கட்டும்" என்றாள்.

அதைக்கேட்டு கேசவபட்டரும் அவரது மனைவியும் மகிழ்ந்து போனார்கள். கேசவபட்டரும் தன் தங்கையிடம் "நானும் இதைத் தான் நினைத்தேன். நீ சொல்லி விட்டாய். ரொம்ப சந்தோஷம் ஆனால் இதற்கு உன் கணவர் சம்மதிப்பாரா?" என்று கேட்டார்.

சியாமளாவும் "உனக்கு சம்மதம் தானே! அவரை ஒப்புக் கொள்ளச் செய்வது என் பொறுப்பு. நீ ஒரு நல்ல நாளைப் பார்த்துக் கொண்டு எங்கள் வீட்டிற்கு வா. உன் பெண் கோமளாவை கோபாலனுக்குக் கொடுக்க விரும்புவதாக அவரிடம் தெரிவி என்றாள்.

இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு கேசவபட்டர் தலைநகரி லுள்ள தன் தங்கையின் வீட்டிற் குச் சென்றார். அதற்கு முன்பே சியாமளாவும் தன் கணவரிடம் தான் தன் அண்ணனைக் கல்யாண வீட்டில் சந்தித்துப் பேசிய விவ ரத்தைக் கூறி இருந்தாள். ஆனந்த பட்டரும் "ஆகா! உன் அண்ணன் வரட்டுமே. ஆனால் நான் பெண் ணைப் பார்த்து விட்டுத்தான் முடிவு செய்வேன். தெரிந்ததா?" என்றார் மிடுக்காக.

கேசவபட்டர் தன் வீட்டிற்கு வந்ததும் ஆனந்தபட்டரும் "பேஷ் வந்தாயா? ரொம்ப சந்தோஷம். சியாமளா விஷயத்தைச் சொன் னாள் ஆமாம். உன் பெண் கோமளா ஏதாவது படித்திருக்கிறாளா?" என்று கேட்டார். அவர் கேட்ட குரலே அவரது அகம்பாவத்தைக் காட்டுவதாக இருந்தது.

கேசவபட்டரும் தனக்கு வந்த கோபத்தைக் அடக்கிக் கொண்டு "என் மகளின் படிப்பைப் பற்றி நான் புகழ்ந்து கூறுவது நன்றாக இருக்காது. அவள் நன்கு படித்த வள். அவ்வளவுதான் நான் இப் போதைக்குக் கூற முடியும்" என் றார். அதைக்கேட்ட ஆனந்தபட்டர் "காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சுதான். நான் அவளை பரீட்சித் துப் பார்த்துவிட்டுப் பிறகு சொல் கிறேன்" என்றார் மிடுக்காக.

கேசவபட்டரும் "சரி உங்கள் இஷ்டம் நீங்கள் உங்கள் குடும்பத் தோடு பெண் பார்க்க எங்கள் ஊருக்கு வாருங்கள்" என்றார்.





ஆனந்தபட்டரும் உடனே பஞ்சாங்கத்தை எடுத்துப் பார்த்து விட்டு "இன்றைக்கு ஐந்தாவது நாள் நன்றாக இருக்கிறது. அன்று பெண் பார்க்க நாங்கள் வருகிறோம்" என்றார். எனவே கேசவபட்டரும் விடைபெற்றுக் கொண்டு தம் ஊருக்குத் திரும்பிச் சென்றார்.

ஆனந்தபட்டர் வரும் நாளன்று அவரை வரவேற்று அழைத்து வர கேசவபட்டருக்கு இயலாது போயிற்று. வேறு ஒரு அவசியமான வேலையை அவர் கவனிக்க வேண்டி இருந்ததால் தன் சிற்றப்பாவின் மகனை ஒரு வண்டியுடன் அனுப்பி ஆனந்தபட்டர் கரை இறங்கியதும் அதில் அழைத்து வரச் சொன்னார். அவனுடன் தன்வீட்டு வேலையாளின் மகனான சுந்தரத்தையும் அவர் அனுப்பி வைத்தார்.

சிறுவன் சுந்தரம் படு சுட்டி. நன்றாகப் பேசக் கூடியவன். ஆனந்தபட்டரும் சியாமளாவும் கோபாலனும் படகிலிருந்து இறங்கியதும் அவர்களை அழைத்துக் கொண்டு சற்று தூரத்தில் நிறுத்தப்பட்டிருந்த வண்டிக்கு அழைத்துச் சென்றான். வழியில் அவன் பேசியவிதம் ஆனந்தபட்டரை வெகுவாகக் கவர்ந்து விட்டது.

எல்லோரும் வண்டியில் ஏறி உட்கார்ந்தனர். ஆனந்தபட்டருக்கு அருகேதான் சுந்தரமும் உட்கார்ந்திருந்தான். அவன் பட்டரிடம் பேச்சுக் கொடுத்தவாறே இருந்தான். அப்போது திடீரென ஆனந்தபட்டர் தன் கையை வெடுக்கென்றுக் கடித்த ஒரு எறும்பை நசுக்கிக் கொன்று "அப்பாடா" என்றார். அதன் பிறகு அவர் "பயலே-அந்தப் பெண் கோமளா ஏதாவது படித்திருக்கிறாளா?" என்று கேட்டார்.

அதைக்கேட்ட சுந்தரம் 'களுக்' கென்று சிரித்து "என் குருவையா படித்தவளா என்று கேட்கிறீர்கள்?" என்று எதிர்க் கேள்வி கேட்டான். ஆனந்தபட்டரும் "ஓகோ! அவள் உன் குருவா? நீ அவளது சீடனா? நீ எவ்வளவு படித்திருக்கிறாய்? என்று கேட்டார்.

சுந்தரமும் "எவ்வளவு என்று சொல்வது? உங்களைக் கேள்வி

கள் கேட்கும் அளவிற்குப் படித்திருக்கிறேன் என்று வைத்துக் கொள்ளுங்களேன்'' என்றான். ஆனந்தபட்டரும் ''அடேயப்பா! என்னையே கேள்விக் கேட்கும் அளவிற்கு நீ படித்துவிட்டாயா? சரி கேள். ஆனால் ஒரு நிபந்தனை. நீ கேள்விகள் கேட்டு நான் பதில் சொல்ல முடியாது போனால் உன் குரு வென்றாகக் கொள்வேன். நான் பதில் சொல்லிவிட்டால் உன் குரு தோற்றுவிட்டதாக நீ ஒப்புக் கொள்ள வேண்டும். சம்மதமா?'' என்று கேட்டார்.

சுந்தரமும் ''சம்மதமே'' என்றான். அதைக் கேட்ட சியாமளாவும் கோபாலனும் திடுக்கிட்டார்கள். சியாமளாவும் தன் கணவரிடம் ''இதென்ன. ஒரு சிறுவனோடு நீங்கள் போட்டி போடுவதா?'' என்று கூறிவிட்டு சுந்தரத்தைப் பார்த்து ''நீ பேசாமல் இருடா'' என்று அதட்டினாள். ஆனால் ஆனந்தபட்டரோ சுந்தரத்திடம் ''நீ கேள்விகளைக் கேள்'' என்றார்.

சுந்தரமும் ''நான் மூன்று கேள்விகள் கேட்பேன். அவற்றிற்கு சரியான பதில் சொல்லாவிட்டால் நீங்கள் தோற்றுப் போனதாக ஒப்புக் கொள்ள வேண்டும். சரியா?'' எனவே ஆனந்தபட்டரும் ''ஆகா! சம்மதம். உன் முதல் கேள்வியைக் கேள்'' என்று கூறினார்.

சுந்தரமும் ''எறும்பின் ராட்சஸன் யார்?'' என்று கேட்கவே ஆனந்தபட்டர் ''இப்படி ஒரு ராட்சஸன் இருப்பதாக எங்கும் எழுதப்





படவில்லையே இது உன் கற்பனையா? இப்படி கண்டபடி கேட்கக்கூடாது'' என்றார். சுந்தரமோ ''இதற்கு உங்களுக்கு பதில் தெரியவில்லை என்றால் அதைச் சொல்லுங்கள். பிறகு நான் பதில் சொல்கிறேன்'' என்றான்.

பட்டரும் சற்று யோசித்துவிட்டு ''எனக்குத் தெரியவில்லை. நீயே சொல்'' என்றார். சுந்தரமும் ''எறும்பின் ராட்சஸன் மனிதன்தான். ஒரு சிறு நசுக்கில் மனிதன் எறும்பைக் கொன்று விடுகிறான். எனவே அவன்தான் எறும்பின் ராட்சஸன்'' என்றான். பட்டர் சிறுவனின் அறிவுத் திறனை பாராட்டியவாறே ''சரி உன் அடுத்த கேள்வி என்ன?'' என்று கேட்டார்.

சுந்தரமும் ''மனிதனுக்கு மிகவும் தேவையானது எது?'' எனவே, பட்டரும் ''நல்ல படிப்பு'' என்றார்.

சுந்தரமோ ''இல்லை. வாக்கு சாதுரியமும் இங்கிதமும். என் வாக்குச் சாதுரியத்தால் நான் என் இரண்டு கேள்விகளைக் கேட்டு மிகவும் படித்தவரான தங்களை மடக்கி விட்டேன். இதை ஒப்புக் கொள்கிறீர்களா?'' என்று கேட்டான்.

பட்டரும் ''நீ சொல்வது சரிதான். உன் மூன்றாவது கேள்வி என்ன?'' என்று கேட்கவே சுந்தரமும் ''மருமகளுக்கு மாமியார் மாமனார் மீது இருக்க வேண்டியது எது?'' என்று கேட்டான். பட்டரும் ''பயபக்தியும் மரியாதையும்'' என்றார்.

சுந்தரமோ ''தவறு. பாசம் இருக்க வேண்டும். மாமியார் மாமனார் நல்லவர்களாக இருந்தால் மருமகள் பக்தியுடனும் மரியாதையுடனும் நடந்து கொள்வாள் ஆனால் பாசம் கொண்ட மருமகள் தன் மாமியார் மாமனார் எப்படி பட்டவர்களாக இருந்த போதிலும் ஆதரித்து மதித்து நடப்பாள்'' என்றான்.

பட்டரால் எதுவும் கூறமுடியவில்லை. வண்டிக்குள் இருந்த சியாமளாவும் கோபாலனும் தமக்கு வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டார்கள். ஆனந்தபட்டர் சுந்தரத்திடம் ''உன் குரு இவற்றை எல்

லாம் உனக்குச் சொல்லிக் கொடுத்தாளா?'' என்று கேட்டார்.

சுந்தரமும் ''இல்லை. என் குரு என்னை நன்கு சிந்திக்க சொல்வார். சிந்தித்தால் எல்லாம் நமக்கே தெரிந்துவிடும். நீங்கள் வருவது கேட்டு என் குரு ''இந்தக் கல்யாணம் நடக்காது'' என்றார். அதற்காகவே நான் இரண்டு கேள்விகளை யோசித்துக் கேட்டேன். மூன்றாவது கேள்வியால் என் எண்ணத்தையும் உங்களுக்குத் தெரிவித்து விட்டேன்'' என்றான்.

வண்டி வீட்டு வாசலை அடைந்ததும் கேசவபட்டர் வந்தவர்களை எதிர்கொண்டு அழைத்துச் சென்றார். யாவரும் கூடத்தில் அமர்ந்ததும் கேசவபட்டர் தம் மகளை அழைத்து எல்லோரையும் நமஸ்கரிக்கச் சொன்னார். அவளும் எல்லோருக்கும் வணக்கம் செலுத்தினாள்.

சாப்பாடு முடிந்து எல்லோரும் உட்கார்ந்திருக்கையில் கேசவபட்டர் ஆனந்தபட்டரிடம் ''மகளைக் கூப்பிடட்டுமா?'' என்று கேட்டார். ஆனந்தபட்டரும் ''எதற்கு?'' என்று கேட்கவே கேசவபட்டரும் ''நீங்கள் அவளது அறிவைப் பரீட்சிக்கத்தான்'' என்றார்.

அதுகேட்டு ஆனந்தபட்டர் சிரித்தவாறே ''வேண்டாம். உன் மகளின் அறிவை அவளது சீடன் சுந்தரத்தைக் கொண்டே தெரிந்து கொண்டுவிட்டேன். அவன் மூன்று கேள்விகள் கேட்டு என்னை மடக்கிவிட்டான். அது மட்டுமல்ல, எதையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்ற அறிவுரையையும் எனக்குக் கூறினான். நானும் நன்கு யோசித்துவிட்டேன். உன் மகளை பூரண சம்மதத்துடன் என் வீட்டு மருமகளாக ஏற்றுக் கொள்கிறேன். இனி நீ முகூர்த்தம் குறிக்க வேண்டியதுதான் பாக்கி'' என்றார்.

ஆனந்தபட்டர் கூறியது கேட்டு எல்லோரும் மகிழ்ச்சியால் நிலை கொள்ளாது போயினர்.





# பர்மனிச் சலவை!

வெகு காலத்திற்கு முன் பர்மாவின் ஒரு சிறுநாட்டை ஹௌலாங் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அந்நாட்டின் தலைநகரில் குவாங் என்ற சலவைத் தொழிலாளி இருந்தான்.

ஒருநாள் அவனிடம் ஒரு குயவன் வந்து "நாளை நான் மன்னரைக் காணப் போக வேண்டும். என் இந்தத் துணிகளை நாளைக் காலைக்குள் சலவை செய்து கொடு" என்றான். குவாங்கும் அவற்றை வாங்கிக் கொண்டான். ஆனால் அத்துணிகளை வெள்ளாவி வைக்கப் பானையில் போட்ட போது அவற்றின் நீல நிறச் சாயம் போய் வெள்ளை வெளேரென்று ஆகி விட்டது.

மறுநாள் காலையில் வந்த குயவன் தன் துணிகளில் சாயம் போய் துணி வெள்ளையாகி விட்டது கண்டு குவாங்க்கை கோபித்துக் கொண்டதோடு சலவைக் கூலியும் கொடுக்காமல் தன் துணிகளை எடுத்துக் கொண்டு போய்விட்டான்.

அத்துணிகளை அணிந்து கொண்டுதான் குயவன் மன்னனைக் காணச் சென்றான். மல்லிகைப் பூபோல வெள்ளை வெளேரென்ற துணிகளை அணிந்து வந்த குயவனைக் கண்ட மன்னன் "அடேயப்பா! கண்ணைப் பறிக்கிறதே. யார் உன் துணிகளை இவ்வளவு நன்றாகச் சலவை செய்தவன்?" என்று கேட்டான்.

தன் துணிகளின் சாயத்தைப் போக்கி விட்ட குவாங்கை மாட்டி விடும் நோக்கத்தோடு அந்தக் குயவன் "அரசே! இந்த ஊரில் குவாங் என்ற சலவைத் தொழிலாளி இருக்கிறான். அவன் எவ்வளவு கருப்

—பர்மா நாட்டுப் பழங்கதை—

பான பொருளையும் தன் சலவை முறையால் வெள்ளை வெளேரென ஆக்கிவிடுவான். தாங்கள் ஒரு யானையைக் கொடுத்துப் பாருங்கள். சலவையால் வெள்ளை யானை யாக ஆக்கி விடுவான்'' என்றான்.

மன்னன் உடனே குவாங்கை அழைத்து வரச்சொல்லி அவனிடம் தன் யானையைச் சலவை செய்து வெள்ளை யானையாக ஆக்கும் படிக் கட்டளை இட்டான். அது குயவன் செய்த விஷமம் எனப் புரிந்து கொண்ட குவாங் ''அரசே! இந்த யானையை வெள்ளாவியில் வைக்க இது பிடிக்கும் அளவிற் குப் பெரிய உறுதியான பானை வேண்டும். அதை இந்தக் குயவ னைச் செய்து கொடுக்கச் சொல் லுங்கள்'' என்றான்.

மன்னனும் குயவனிடம் குவாங் கேட்டபடி ஒருபானை தயாரித்துக் கொண்டு வரும்படிக் கட்டளை இட்டான். குயவன் திகைத்துப் போனான். மன்னனின் கட்டளை ஆயிற்றே. அதனால் மிகப்பெரிய பானை ஒன்றைச் செய்து மன்னன் முன் வைத்தான். மன்னனும் குவாங்கை அழைத்து ''உம். என் யானையைச் சலவை செய். அதனை யும் கொண்டு வரச் சொல்லி இருக்கிறேன்'' என்றான்.

குவாங்கும் மூன்று பெரிய கற் களை வைத்து அடுப்பாக்கி அதன் மீது குயவன் செய்த பானையை



வைத்தான். யானை வந்ததும் அதனை அந்தப் பானையில் ஏற்றச் சொன்னான். ஆனால் யானை ஏறியதும் அந்தப்பானை உடைந்து நொறுங்கிப் போயிற்று.

அதைக் கண்ட மன்னன் கோபம் கொண்டு குயவனிடம் ''நீ நாளைக் காலை மிக உறுதியான பானை ஒன்றைச் செய்து தரவேண்டும். இல்லாவிட்டால் உன் தலை போய் விடும்'' என்று கட்டளை இட்டான். குயவனும் அப்போதைக்குச் சரி என்று தலையை ஆட்டிவிட்டு அன்றிரவே தலைநகரை விட்டு ஓடிப்போய் விட்டான்!

மறுநாள் மன்னன் குயவன் தலைமறைவாகி விட்டதைக் கேட்டு குவாங்கை அழைத்து யானையை

அவனோடு அனுப்பி சலவை செய்யச் சொன்னான். குவாங்கும் அதனை ஓரிடத்தில் கட்டிப்போட்டு ஏணி வைத்து அதன் மீது ஐந்தாறு தடவை சுண்ணாம்பு அடித்தான். யானை வெள்ளையாகி விட்டது.

மறுநாள் அந்த யானையை மன்னன் முன் கொண்டு போய் நிறுத்தினான். மன்னன் அதைக் கண்டு மகிழ்ந்து குவாங்கிற்கு நிறைய பணம் கொடுத்ததோடு அழகிய குதிரை ஒன்றையும் பரிசாக அளித்தான்.

பரிசுகளை வாங்கிக் கொண்ட குவாங் யானையின் வெள்ளை நிறம் மாறுவதற்குள் குதிரை மீது ஏறி வேகமாகத் தலைநகரை விட்டுச் சென்றான்.

வெகுதூரம் சென்றதும் அவன் ஒரு ஆற்றின் கரையை அடைந்தான். அங்கே ஒருவன் கிழிந்த ஆடைகளை அணிந்தவனாய் கவலை தோய்ந்த முகத்தோடு மீன் பிடித்துக் கொண்டிருப்பதை அவன் கண்டான். சற்று உற்றுப் பார்த்ததில் அந்த மனிதன் குயவன்தான் எனக் குவாங் கண்டு கொண்டான்.

அவன் குயவனை அணுகி "என்னப்பா இது? தொழிலையே மாற்றிக் கொண்டு விட்டாயா?" என்று கேட்டான். குயவன் அவனைப் பார்த்து ஆச்சரியப்பட்டு "நீ எப்படி இங்கு வந்தாய்? நான் உன்னை மன்னனிடம் மாட்டிவிட நினைத்தேன். அதன் பலனாகத்தான் நான் இப்போது திண்டாடுகிறேன்" என்றான்.

குவாங்கும் "கவலைப்படாதே. நானும் இனித் தலைநகரில் இருக்க முடியாது" என்று தான் செய்ததைக் கூறி மன்னன் தந்த பரிசுகளைக் காட்டி "நாம் இருவருமே இந்த நாட்டின் எல்லையைக் கடந்து வேறு நாட்டுக்குப் போய் அங்கு நம் தொழில்களைச் செய்து பிழைப்போம்" என்றான்.

குயவனும் அதுகேட்டு மகிழ்ந்து அவனுடன் கிளம்பி விட்டான்.



# இயற்கை விநோதங்கள்



## எங்கும் நிறைந்தாயே!

உலகில் கொசுக்கடியிலிருந்து தப்பிய மனிதனே இல்லை. கொசுக்கள் இல்லாத இடமே உலகில் இல்லை. அவை கடும் குளிரையும், வெயிலையும் தாங்கக் கூடியவை. கடும்பனி கொட்டும் வடகனடா, வடதுருவப் பகுதிகளில் கூட கொசுக்கள் உள்ளன. வெயில், மழை என உள்ள பூமத்திய ரேகைப் பகுதி காடுகளிலும் இவை உள்ளன. கொசுக்கள்தான் புழு பூச்சிவர்க்கத்தில் உறுதி உடல் கொண்டவை.

## புழுக்களின் உலகம்

உலகில் வாழும் *1,000,000* ஜீவராசிகளில் *300,000* புழு பூச்சிகள் இனத்தைச் சார்ந்தவை. இந்த இனத்தைப் பற்றி எழுதுவது என்றால் குறைந்தது 6000 பக்கங்கள் கொண்ட புத்தகமாகத்தான் ஆகும். அப்புத்தகத்தை ஒருமுறை படித்து முடிப்பதற்குள் மேலும் பலபுதிய புழு பூச்சிகள் தோன்றிவிடும்.





## கோழிக் குஞ்சுகள் கணக்கு

'முட்டை இடும் போதே குஞ்சுகளை எண்ணுவது போல' என்ற பழமொழியைக் கேட்டிருப்பீர்கள் அப்படி எல்லாக்-கோழி முட்டைகளும் உலகில் பொரிந்து கோழிக் குஞ்சுகள் வெளிவந்தால் உலக மக்கள் தொகையைப் போல இரண்டு அல்லது மூன்று மடங்குகளாகி விடலாம். ஒரு கோழிக்குஞ்சு மூட்டைக்குள் உயிர் பெற்று அதை உடைத்துக் கொண்டு வெளிவர இரண்டு நாட்களாகின்றன.

## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 50

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1992 ஏப்ரல் மாத இதழில் வெளியிடப்படும்



M. Natarajan



M. Natarajan

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ பிப்ரவரி 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும். ★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 50/—பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க் கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

---

### டிசம்பர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : இயற்கை அளித்த இனிய காட்சி

இரண்டாவது போட்டோ : செயற்கைப் படைப்பின் சீரிய மாட்சி

பரிசு பெற்றவர் : திரு. டி. கே. சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்

பரிசுத் தொகை ரூ. 50/-ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.

---


### அம்புலிமாமா

இந்தியாவில் ஆண்டு சந்தா ரூ. 48—00

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :

டால்டன் ஏஜென்சீஸ், சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை-600026

Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


---

